## REFORM OF RURAL AND ELEMENTARY EDUCATION.

*Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*" Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End.*

ஸத்தியும் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




*அன்பேபவன் : அறிவேசக்தி : ஓம் தத்ஸத்.]* [God is Love : Knowledge is Power : *Aum*

**"New Series"** ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.** **"Approved"**

புத்தகம். **24.**] நள ௵ தை ௴, **1917** ௵ ஜனவரி ௴ [சஞ்சிகை **10.**

### Business "Terms":

*N.B.*—To avoid all possibility of misapprehension, we *reiterate* our " terms." (approved by our constituents and by Government) which, from the beginning, are :—

1. Cash or Remittance with Order : Rs. 5 per Vol.; or,
2. *One month's credit at the arrears rate* : Rs. 6 per Vol.
3. Arrears to be cleared on rendering of *a/cs.* or by V.P.P.
4. All Indents registered for School Edition only and to begin with the current volume (corresponding with Tamil or Official year, April-March).
5. Subscriptions registered to continue from Vol. to Vol. and not to be discontinued in the middle of a Vol.
6. No popular edition issued owing to scarcity of paper
7. Monthly parts (spare or sample) 8 (eight) annas each.

### General Notice.

☞ Owing to rarity of credit and scarcity of paper, we beg to make it clear and give notice to all that—

i. the *terms* offered are for regular subscribers only ;
ii. no exception to these rules can be made or recognised ;
iii. short credit allowed should not be misused ;
iv. unpaid accounts are subject to "fluctuations" and overcharges ;
v. all arrears should be fully paid *within* three months (*time being an important factor*) ;
vi. every outstanding account will be charged *One Rupee Extra* per Vol. or any part thereof for every notice or Reminder sent after this period;
vii. all subscribers are *ipso facto* bound to observe the rules.

(*By Order of the Managing Committee.*)

THE MANAGING AGENTS, " VIVEKACHINTAMANI,"
*Novr.* 1916.] *Lalitalaya*, 19, *Adam Street*, *Mylapore*.

☞ *Calculations made are based on the principle of one copy for each school which should be strictly adhered to.*

*N.B.*—Due care is taken in addressing and personally handing copies to the Post Office at Brodie's Road and there the publishers' responsibility ceases. Evidence of posting is preserved and can be made available for enquiries. The publishers do not undertake to replace missing copies but will endeavour to supply spare copies when available on payment, if applied for within 30 days after the 15th of each month for which such copies are due.

# REFORM OF RURAL AND ELEMENTARY EDUCATION.

### THE HON'BLE JUSTICE SIR JOHN WOODROFFE'S VIEWS.

Writing to Mr. C. V. Swaminatha Aiyar, K. S. S. A., under date the 4th December, 1916, from Calcutta, fresh from Kashmir, whither he had gone on leave, Sir John Woodroffe expresses his views in a refreshing manner which is sure to command the attention of all earnest workers in the field of Educational Reform. This is what he writes :

"Thank you for sending me your Memorandum on Rural Education. As regards practical measures I have not the necessary knowledge which would *authorise* me to speak. But I certainly agree with you on matters of principle. I suppose any one of sense is now aware that our education is no education at all. I have always thought so. To begin with, people confuse education and literacy which are two different things. Any one can read and write without being educated. It was Sir George Birdwood who said that the illiterate Indian peasant was the most cultivated peasant in the world. He has a great tradition behind him, portions of which suited to his capacity have been meted out to him through the ages in the way best suited to him. I personally detest the modern system of Education. I doubt whether at any period of the world there have been so many truly uncultivated Philistines as are to be found to-day. Many of them may have high 'Educational' honours to their credit but they are not cultivated and as regards the most they have a *veneer* of knowledge ill-digested, ill-understood, which has spoiled the qualities which Nature has given them.

2. "You truly write that the basis of all (Education) is 'the awakening of the spiritual life.' By this I do not mean mere church-going, puja or the like. It is too long to explain in a letter but your note shows you know what I mean. There is another danger as regards Primary Education and it is this. What Primary Education should be for Indians should be determined by the latter who know the Indian soul and its needs. If it is planned and administered by foreigners with different ideas, the giving of Primary Education may make matters worse than if no Education were given at all ; for the system may denationalise the peasants who with the Indian woman *are* the casket in which your traditions are preserved and thus your precious heritage will be lost.........I wish you well in your admirable work and trust that it will meet with success but I suppose you have learnt by now that there is always a 'but.' It is a good idea to address the Member of Education who being himself an Indian will I am sure, look well on your endeavours.

Yours sincerely,

JOHN WOODROFFE."

### Dr. D. DUNCAN, LATE DIRECTOR OF PUBLIC INSTRUCTION.

Dr. D. Duncan, late Director of Public Instruction, who is one of the supporters of the Children's Educational Movement, still keeping himself in touch with the same, writes with reference to the Memorandum on the Reform of Rural Education published in the *Vivekachintamani* as follows, under date 20th November 1916 :—

"I am glad to see by the copy of *Vivekachintamani* received the other day, that you are as active as ever in your efforts for the welfare of your fellow-countrymen, old and young. Your main purpose is rightly, I have no doubt, to get at the young. The war is the engrossing subject in this country at present ; but educational questions are also being discussed ; it being realized that many changes must come after the war and that it is desirable that men's minds should be prepared before hand, so that ill-considered schemes should not be rushed at the last moment."

### THE "MADRAS MAIL" OF 5th DECEMBER 1916 ON THE REFORM OF RURAL EDUCATION.

"The *Vivekachintamani*, the Tamil monthly which is doing much good work in the cause of education and particularly rural education and children's education, is urging the need for the development of the faculty of observation in children being given the foremost place in any system of elementary and rural education. Considering the importance of the subject, a journal of the type of *Vivekachintamani* has much scope for useful work both for teachers and thinking pupils. It is being conducted by its able and enthusiastic Editor, Mr. C. V. Sawminatha Iyer, who has laboured much for the promotion of vernacular education."

"No good work is ever lost."  "My best wishes for the success of your publication"—*Sir Harold Stuart, K. C. V. O*

புஸ்தகம்-24.] [சஞ்சிகை-10.

"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."

நள ஞு | தைமீ } விவேக  சிந்தாமணி { December-January 1916-17.

ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவைப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
க்ற்றோ மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னோஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## WANTED GREAT "MISSIONARIES OF EDUCATION."

Speaking at a meeting of educational workers, Lord Haldane declared it to be his wish to devote the remaining days of his life to being a missionary on the great question of Education. Germany knew the value of Education. "When peace came," Lord Haldane said, "they would hear no more in Germany about 16-inch guns, but they would hear a great deal about continuation schools. The Germans were training up a generation of skilled workmen with whom we would not compete. We had to be upsides with Germany in this matter. We must take care to train the children of our working classes in at least as good a way as the Germans had been able to train theirs. If we cared enough, educational developments and reforms could be forced through. The State would find the money, for unless it was spent, the nation would drop out in the race. A great Education system was an expensive thing, but it was our duty to make it the first question to be considered after the War." What India wants at present even more than England does, is great "Missionaries of Education" like Lord Haldane and Sir Rabindranath Tagore.

## வித்யாவிஷயமாய் கங்கணம் கட்டி உழைக்க உத்தமர்கள்வேண்டும்.

ஐரோப்பாவில் இப்பொழுது சென்ற 30-மாசங்களாக நடந்துவரும் பாரதப்போர் மேற்றிசையார் பலத்தையெல்லாம் குலைத்துவிட்டது. ஒவ்வொரு தேசத்திலும் திடகாத்திரர்களாக இருந்தவர்களில் பெரும்பான்மையரும் போர்க்களம் சென்று மாண்டு மடிந்தனர். மிஞ்சியிருப்பவர்களெல்லாம் கிழவர்களும் சிறுவர்களும் பெண் பாலர்களுமேதான் என்று சொல்லலாம். மத்திய வயசுடையவர்களெல்லாம் போர்க்களஞ்சென்று மடிந்தவர்கள் போக மற்றவர்கள் அங்கங்கே யின்னும் போர்க்களத்தில் நின்று போராடி வருகிறார்கள். ஜெர்மனிக்கும் கைசளைத்துவிட்டது என்று தோன்றுகிறது. ஏனெனில் இந்த மாசம் 'ஜெர்மன் சான்ஸெலர்' சமாதானத்தைப்பற்றிப் பேசி ஒவ்வொரு பகைநாட்டார்க்கும் தனித்தனியே சமாதானப் பேச்சுவிட்டுப் பார்த்திருக்கிறார். ருஷியாவும் பிரான்சும் அவர்கள் தேசத்தில் ஒரு பங்கை ஜெர்மனி வசப்படுத்திக்கொண்டிருக்கிற 'வல்லடி வழக்குக்கு'த் தீர்ப்பு நிவாரணம் சொல்லாமல் தானே சமாதானப் பேச்சுக் கொடுத்துப் பார்ப்பது அவர்களை ஏளனம் செய்வதுபோலிருக்கிறதென்று மறுத்துவிட்டார்கள். அங்கிலேய பார்லிமெந்து சபையில் தற்கால முதல் மந்திரி மிஸ்டர் லாய்ட் ஜ்யராஜ் அவர்

களும் ஜெர்மானியர் சமாதானப் பேச்சுக் கொடுத்துப் பார்க்கிறார்கள் என்றும் ஆனால் அதில் சமாதானம் செய்துகொள்ள வழி வகை யொன்றும் காணவில்லையென்றும் வல்லடி வழக்காய்ப் பிடித்துக்கொண்ட தேசங்களை யெல்லாம் காலிசெய்துவிட்டு, அவர்கள் செய்த அக்கிரமங்களுக்கு நஷ்டங் கட்டிக்கொடுத்து, இனி அதிக்கிரமித்து நடக்காதபடியிருக்கத் தக்க ஜாமினும் கொடுக்கவேண்டுமென்றும், அப்படி யொன்றும் செய்யாத வரையில் சமாதானப் பேச்செல்லாம் வீண்பேச்சேயென்றும் அதைக் கண்டு கூட்டாளிகள் யாரும் ஏமாந்து போகமாட்டார்களென்றும் சொல்லி வெளியிட்டுப் பேசினார். பற்றியபதீ காட்டுத்தீ யானாலும் விறகுள்ளமட்டும்தான் அது எரியும். காட்டுத் தீயின் கொடுமையினால் பச்சை மரங்களும் காய்ந்து கருகித் தீய்க்கு இரையாகலாம். ஆனாலும் பற்றியதீ எப்படியும் அணைந்தேதான் தணியவேண்டும். ஆகையால் யுத்தப் போக்கையும் சமாதானப் பேச்சையும் விட்டு இந்த யுத்தத்துக்குப் பிறகு ஆகவேண்டிய முக்கிய காரியம் என்னவென்று விசாரிப்பது ஒக்கும்.

"பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வியல்பினானே" யென்றதனால் பழையனவாக வுள்ளனவெல்லாம் மார்கழி மாசம் கழிப்புக் கழிப்பதுபோல இந்த மஹா யுத்தத்தில் கழிந்துபோக, அக்தஸ்தானத்தில் புதியனவாகப் புகவிருப்பது என்ன என்னவென்று விசாரிக்க இதுவே சமயம்.

லார்ட் ஹால்டேன் என்பவர் ஜெர்மனியோடு நன்றாகக்கூடிப் பழகினவர். அவர்களுடைய உட்கருத்தெல்லாம் அவருக்கு நன்றாகத் தெரியும். அவர் என்ன சொல்கிறாரென்றால்: இந்தச் சண்டை முடிவுக்கப்புறம் ஜெர்மனியில் 16-அங்குலப் பெரிய பீரங்கிகள் செய்வதைப்பற்றி யாதொரு பேச்சும் கேட்கப் படமாட்டாது. பின்னை 'யென்ன பேச்சுப் பிரதானமாக விருக்குமென்றால், பிள்ளைகளைப் படிக்கப் பழக்கும் முறை அதி விஸ்தாரமாக அனுஷ்டிக்கப்பட்டு அதில் அத்தேசச் சிறுவர்கள் நன்றாகத் தேறச்செய்யப் பெரும்பாடு பட்டுழைப்பார்கள் என்பது நிச்சயம். அவர்களோடு போட்டிபோட பிரிடிஷாரால் முடியாதபடி, படிப்பு அத்தேசத்தில் மிகப் பின்னடைந்திருக்கிறது. ஆதலால் அவர் அவருடைய மிகுதியான வாழ்நாளையெல்லாம் வித்யா சீர்திருத்தம்செய்து வித்தையைப் பரவச்செய்ய வுழைப்பதில் தீக்ஷைகொண்டுழைக்கத் தீர்மானித்திருக்கிறதாகச் சொன்னார்.

அது உண்மையானபடி நல்ல மனப்போக்குத்தான். இனி வருங்காலம் குழந்தைகளுக்குரியது. ஆகையால் அவர்களை யாளாக்க முயல்வதுதானே மேலோர்க் கிசைந்த பெரிய வேலை. "பிள்ளைகளை வளர்க்கும் வித்தை பிரமாதமான வித்தை" யென்று விவேகத்தாய் சொல்லியிருக்கிறபடியால் அந்தப் பிரமாதமான வித்தையை நடத்தப் பேராற்றல் பெற்ற பெரியவர்களே முன்னின்றுழைக்கவேண்டும். இந்தியாவில் இப்பொழுது ஸர் ரவீந்திரநாத் தாகோர் அவர்கள் இதற்கென்றே கங்கணம் கட்டி யுழைத்து வருகிறார்கள். இவர்களைப் போன்ற மேதாவிகள் வித்தையைக் குழந்தைகளுக்குப் போதிக்கவும் அவர்கள் உள்ளபடி வித்யாலக்ஷ்மி வரப்பிரஸாதம் பெறவும் உழைக்க நோன்புகொண்டு முயற்சிக்கவேண்டும். இந்தியா இங்கிலாந்தைவிட தற்காலம் வித்யாவிஷயத்தில் மிகப் பின்னடைந்திருக்கிறது. பூர்வத்தில் ரிஷிகளும் முனிவர்களும் மற்றப் புருஷோத்தமர்களும் பாலர்க்கு வித்யா சிக்ஷை தீக்ஷை செய்துவைப்பதே உத்தம தர்மமாகக்கொண்டு உழைத்துவந்தார்கள். ஸ்ரீஇராமலக்ஷ்மணர் ரிஷிகளால் ஆளாக்கி விடப்பட்டவர்களே. அப்படிப்பட்ட பாரம்பரிய தர்மம் ஏற்பட்ட இத்தேசத்தில் இப்பொழுது படிப்பு மிகவும் ஹீனஸ்திதியிலிருக்கிறது. இதன் காரணத்தைப்பற்றி கல்கத்தா

ஹைகோர்ட்டு ஜட்ஜி கனம் ஸர் ஜான் வூட்ராப் அவர்கள் இந்த விவேகசிந்தாமணி பத்திராசிரியருக்கு ஒரு அருமையான கடிதமெழுதியிருக்கிறார். அதை இந்தியா கவர்ன்மெண்டு வித்யாமந்திரி கனம் ஸர் ஸங்கரன் நாயர் அவர்களுக்கும் இவ்விராஜதானி கவர்ன்மெண்டாரில் வித்யா இலாகா, லோகல் அண்டு முனிசிபல் இலாகாத் தலைவர்களுக்கும் அந்தந்த இலாகா காரியதரிசிகள் மூலமாக அனுப்பி வைத்திருக்கிறோம். அஃதுடன் பாலபோத சாதனசங்க விசாரணைக் கமிட்டியார் சென்ற நவம்பர்மீ 30உ கூடி நடத்திய நடபடிக்கைகளையும் அனுப்பி வைத்திருக்கிறோம். இதன்முகட்டில் அவருடைய கடிதத்தை வெளியிட்டிருக்கிறோம். அடுத்த சஞ்சிகையில் முதல் அதன் உட்கருத்தை விவரத்துடன் எடுத்துக் காட்டி யெழுதுவோம். இப்பொழுது இந்தியாவுக்கு வேண்டிய முக்கிய தேவை யென்னவென்றால் பாலபோதன விஷயமாய்க் கங்கணம் கட்டியுழைக்கும் உத்தமோத்தமர்களே யென்றுமட்டும் வற்புறுத்தி இதை முடிப்போம். சுபமஸ்து.

இங்கே ஒருவிஷயம் குறிப்பிடத்தக்கது. இப்பத்திராசிரியர் பாலபோதன விஷயமாக சிறுவர்களுக்கும் அவர்கள் மனப்பயிற்சிக்குக் காரணமான பெற்றோர் போதகர்களுக்கும் சாதகமாகவிருக்க இப்பத்திரிகையை நடத்த வித்யா இலாகா அதிகாரி முன் கங்கணம் கட்டியுழைக்க உடன்பட்டிருக்கிறார். அப்படியே வித்யா இலாகா அதிகாரிகளும் உதவிபுரியக் கடமைப்பட்டிருக்கிறார்கள். பள்ளிக்கூட உபாத்தியாயர்கள் பலரும் இதன் அருமை பெருமையை பாராட்டி வருவதை நாமறிவோம். அவர்கள் உபயோகத்துக்காகவென்று லோகல் போர்டார் வாங்கத்தீர்மானித்த புஸ்தகங்கள் அவர்களிடம் சேராதபடி சிலர் இடையூறுவிளைத்து வருகிறதாகத் தெரிகிறது. இந்த வில்லங்கம்நீங்க ஜகதீசன் அருள்புரிய வேண்டுமென்று சபாநாயகரைப் பிரார்த்தித்து மன்றாடிக் கேட்டுக்கொள்கிறோம்.

## THE HOME AND SCHOOL INFLUENCES.

## இல்லப்பயிற்சிக்கும் பள்ளிப்பயிற்சிக்குமுள்ள வித்தியாசம்.

பிள்ளைகள் பள்ளிக்கூடத்திலிருக்கையில் மனதிற் பதியப்பெறும் அபிப்பிராயங்களுக்கும், வீட்டிலிருக்கையில் பதியப்பெறும் அபிப்பிராயங்களுக்குமுள்ள விரோதம் முன்னிலுமிப்பொழுது அதிகப்பட்டிருக்கிறது. இதனல் சிறுபிள்ளைகள் பகுத்தறிவுண்டாகாத காலத்திலே இன்னது சரி இன்னது பிசகு என்று ஐயமற உணர்ந்துகொள்ளக்கூடாமல் ஒன்றுக்கொன்று நேர் விரோதமான இருவகை பதிகாரங்களுக்குட்பட்டு அவர்கள் சரியாக நடக்க வேண்டியவழி யின்னதென்றுணரக்கூடாமல் மனம் ஊசலாட அவதிப்படுகிறார்கள். இதனல் சரியான வழியில் நடக்கவேண்டுமென்கிற நல்ல தீர்மானத்தை நிறைவேற்ற முடியாமல் சமயத்துக்குத் தக்கபடி நடந்துகொள்வதே சாமார்த்தியமென்கிற தப்பெண்ணம் மனதிற் பதிந்து அவர்கள் மனதைக் கெடுத்து விடுகிறது. இது காரணத்தினலேயே தற்காலம் இங்கிலீஷ் படித்தவர்கள் பெரும்பாலும் காலத்துக்குத் தக்க கோலம்போட்டு மன உறுதியும் சீர்மைக்குணமுமின்றி வீட்டில் ஒரு மாதிரியாகவும் வெளியில் ஒருமாதிரியாகவும் பேசிப் பழகிப் பல வேஷக்காரர்களாய் ஆங்கிலேயருக்குள்ள மனோதைரியமும் துணிவும் திடமுமின்றி அவர்களால் இளப்பமாக வெண்ணி அனேகமாய் அவமதிக்கப்பட்டே வருகிறார்கள். இது பெற்றோர் குற்றம் மாத்திரமின்றிப் பள்ளிக்கூட ஏற்பாட்டினுமுள்ள குற்றமாம்.

இக்குற்றத்தைத் தக்க காலத்தில் கண்டு நிவர்த்திக்காமையால் நம்தேசத்துக்கு எவ்வளவோ சொல்லரிய தீங்கு விளைந்திருக்கிறது. இன்னமும் நிவர்த்திக்காமல் காலதாமதம் செய்துவரில் என்ன விநாசகாலம் நேரிடுமோ அதைப்பற்றி நினைக்கவும் மனம் நடுங்குகின்றது. இவ்விஷயத்தை சுதேசபாஷாபிவர்

த்தி விஷயமாக தர்க்கப்நேர்ந்த சமயத்தில், மதராஸ் மெயில் பத்திரிகையில் மிக வற்புறுத்திக்கூறி யிருக்கிறோம். கவர்ன்மெண்டார், வித்தியா இலாகா அதிகாரிகளுமேயன்றி நம்முள் பெற்றோராயிருக்கும் பொறுப்புவாய்த்த ஒவ்வொருவரும் இது விஷயத்தைக் குறித்து ஆர அமர யோசித்து இக்குற்றத்தை நிவர்த்திக்க முயற்சி செய்யக் கடமைப்பட்டவர்களா யிருக்கிறார்கள். இக்கடமையை அவர்கள் நிறைவேற்றப் பின்வாங்குவரேல் மகா பாதகம் விளையும். வித்யா அதிகாரிகளும் கிளிப்பிள்ளைக்குப் பேச்சுக் கற்றுக்கொடுப்பது போல் நம் பிள்ளைகளுக்கு இங்கிலீஷைப் பொட்டைப்பாடமாக நெட்டுருப்போட்டு வைப்பதே வித்யாபோதனை யென்று ஏமாந்து, தங்கள் கடமையைத் தாங்கள் இதனாலேயே சரிவரச்செலுத்தி வருவதாக மனப்பால்குடித்திராமல் உண்மையை யாராய்ந்தறிந்து இப்பொழுதுள்ள இப்பெருங்குற்றம் நிவர்த்தியாகும்படி வித்யாபோதன முறையைச் சீர்திருத்தி, சரியான மனோவிர்த்தி யுண்டுபண்ணக்கூடிய உண்மையான வித்யாபோதனை தேசத்திற் பரவும்படிச் செய்ய முயற்சிக்க வேண்டும்.

ஜனங்களும் அதிகாரிகளும் சேர்ந்துழைத்துப் பிள்ளைகளின் இல்லப்பயிற்சிக்கும், பள்ளிப் பயிற்சிக்குமுள்ள வித்தியாசத்தைக் குறைத்து இரண்டையும் ஒன்றுபடுத்தப் பார்க்கவேண்டும். இச் சிலவார்த்தைகளுடன் இதன் ஆரம்பத்தில் குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றி சுமார் 40-வருஷங்களுக்குமுன் வித்யா இலாகா அதிகாரிகள் மேன்பார்வையில் நடைபெற்றுவந்த ஒரு பத்திரிகையில் வெளியானதை, இன்றைக்கும் பொருந்துவதா யிருப்பதுபற்றி அப்படியே எடுத்துக்கீழே பிரசுரிக்கிறோம். இது சம்பந்தமாகச் சமயம் நேர்ந்துழில் பின்னும்பேசி இப்பொழுது நமது பிள்ளைகளைப் பயிற்றுவிக்கும் முறையில் சென்ற 40-வருஷ காலமாயுள்ள குறைகளை வற்புறுத்திக்காட்டி வருவோம்.

"இப்போது இத்தேசத்தில் பிள்ளைகளைப் படிப்பிக்கப் பாடசாலைகள் அநேகம் ஏற்பட்டிருக்கின்றன; அவற்றில் படிக்கின்ற பிள்ளைகளுக்கோ கணக்கில்லை; ஆயினும் அப்பிள்ளைகள் படிக்கின்ற படிப்பெல்லாம் வெகுவாய் மதிமலர்ச்சிக்கு மட்டும் ஏதுவாயிருக்கின்றனவே யொழிய நீதிபோதனைக்குப் பயன்படவில்லை. பிள்ளைகள் முதலில் ஒரு பாடசாலையில் படிக்கப் பிரவேசிக்கிற நாள்முதல், கடைசியில் படிப்பெல்லாம் முடிந்ததென்று சொல்லி ஒரு பெரிய வித்தியாசாலையைவிட்டு நீங்குகிற நாள்வரையில், சர்வகலாசாலையார் ஏற்படுத்திய பரீக்ஷைகளுக்கு உபயோகமான பாடங்களையே படித்துக் காலங்கழிக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய கோரிக்கை நிறைவேறாமல் இருக்கிறதென்பதில்லை; அந்த விஷயங்களில் சித்தி பெறவே பெறுகிறார்கள். ஆயினும் பின்பு உலக வியாபாரங்களிற் புக வேண்டுமென்றால் வருத்த முண்டாகின்றது. இக்காலத்துப் பிள்ளைகளுக்குப் புத்தி விவேகங்கள் இல்லையென்பதில்லை; உபாத்தியாயர்கள்கூடக் கண்டு ஆச்சரியப்படும்படியான புத்தி நுட்பமும் விவேகமுமுள்ளவர்களா யிருக்கிறார்கள். அவர்களுடைய புத்தி வாலிபத்திலேயே நன்றாய்ப் பயிற்றப்படுமானால், பின்பு அவர்கள் உலக வியாபாரங்களில் வெகு சாமர்த்தியமுடையவர்களா யிருப்பார்கள். அப்படிப் பயிற்றுவதுதான் வெகு அருமையா யிருக்கின்றது. உபாத்தியாயர்கள் அததற்கேற்றபடி புத்திகூர்மையைமட்டும் கற்பித்துக் கொடுக்கிறார்களே யொழிய உலக வாழ்க்கைக்கு வேண்டிய நீதிமுறைகளை நன்றாய்ப் போதிப்பதில்லை.

"இக்காலத்துப் பிள்ளைகளுக்கு நீதிமுறைகள் மனதில் சரியாகப் படிவதில்லை. ஒன்றுக்கொன்று விரோதமான கருத்துகள் முதலி

*Vide Series of 4 Articles in the "Madras Mail" under "Vernacular Studies in Madras."

லேயே அவர்களுக்கு உண்டாகின்றன. வீட்டிலிருக்கையில் ஒரு விதமான அபிப்பிராயமுண்டாகின்றது; பாடசாலையிலும் புத்தகங்களைப் படிக்கையிலும் மற்றொருவிதமான அபிப்பிராயமுண்டாகின்றது. பந்துக்களும் அவ்விரோதாபிப்பிராயங்களை மாற்றி அப்பிள்ளைகளின் மனதை ஒருமைப்படுத்துவதில்லை; பாடசாலை உபாத்தியாயர்கள் அதைச் செம்மைப்படுத்தினால் படுத்தலாம்; அவர்களும் தாங்கள் கடமையாய்ச் செய்யவேண்டிய கற்பனையொன்று தவிர மற்ற விஷயங்களிற் புகுவதில்லை. பிள்ளைகளுக்கு வீட்டிலே கிடைக்கின்ற நற்போதனை மிகவும் அற்பமானது. "செடியாய் வணங்காதது மரமாய் வணங்குமா" என்கிறபடி, இளமையிலேயே திருத்தப்படாத மனது முதிர்ந்த பிறகு திரும்புமா என்பதைக் கவனியாமல், தாய் தந்தையர்களும் தம்மிஷ்டப்படி வணங்கத்தக்க இளமனதைச் சீர்ப்படுத்தாது உபேக்ஷையா யிருந்துவிடுகிறார்கள். பாடசாலைகளில் பூர்வகாலத்துக் கோதண்டம் முதலிய கொடிய தண்டனைகளெல்லாம் அனேகமாய் அடக்கப்பட்டிருந்தாலும், கோபமும் கொடுமையும் அதிகமாய் அடங்கவில்லை. இப்படிப் பலவாறிருப்பதனால், பிள்ளைகள் அடங்கியொழுகவேண்டிய வழி செம்மையாய்த் தெரியாமலே பெரியோராவார்களானால், அதைக் கண்டு நாம் ஆச்சரியப்படுவானேன்? சில பிள்ளைகளுக்குச் சரி இன்னது தப்பு இன்னதென்பதுகூடச் செம்மையாய்த் தெரிவதில்லை. தற்செபலாய் அவரவர் புத்திக்குத் தோன்றியபடி ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு விதமான அபிப்பிராயமுண்டாகின்றது. வித்தியாசாலையில் உயர்ந்த பாடங்கள் படிக்கும்போதும் இப்படியே. பின்பு தானே சுதந்திரமாய் உயிர்வாழ்க்கைக்கு வேண்டிய வியாபாரங்களை நடத்திக்கொண்டு போகவேண்டிய நாள் வந்தால் அப்போது வெகு வருத்தமுண்டாகின்றது. சிறந்த துணிவும ஏதோ ஒரு கொள்கையில் நல்ல பிடிமானமுள்ள சிலர்மட்டும் செம்மையாய்க் காரியங்களை நடத்திக்கொண்டு போகிறார்கள். மற்றவர்கள் ஒருவழியுந் தெரியாமல் உழன்று தவிக்கிறார்கள்.

"இத்தேசம் முன்போலிராமல் இப்போது வெகுவாய்ச் சீர்ப்படுத்தப்பட்டிருந்தும், சிறந்த நீதிபோதனைமட்டும் பிள்ளைகளுக்கு மிகவும் அருமையாயிருக்கின்றது. இனி இத்தேசத்துப் பெண்பிள்ளைகளெல்லாம் தக்கபடி நன்றாய்க் கற்பிக்கப்பட்டுப் பிள்ளைகளுக்கெல்லாம் புத்தி தெரியாமலிருக்கையிலேயே விவாஹம் செய்வது நிறுத்தப்படுங்காலம் வரும்போது இதுவும் சீர்படுமெனத் தோன்றுகின்றது. அகற்த இடையிலேயே பிள்ளைகளுக்குப் பலவித நீதிகளும் ஜீவகாலத்தில் அவர்கள் சமுசாரத்தை நடத்தவேண்டிய விதமும், யுக்தாயுக்தங்களைப் பகுக்கறியுந் திறமையும் இவை முதலியவெல்லாம் கொஞ்சங் கொஞ்சமாய்க் கற்பிக்கப்பட்டு வந்தாலும் வரலாம்.

"இச்சிறந்த விஷயங்களையெல்லாம் பிள்ளைகளுக்குக் கற்பிக்கும் வழி எப்படியெனில், நாமே வருத்தி அவர்களை ஒரு வழியில் திருப்பாமல் பிள்ளைகள் தங்களுக்குத் தாங்களே நியாயங்களையும் நன்மை தீமைகளையும் கடமைகளையும் அறிந்துகொள்ளும்படி அவர்கள் மனதை நாம் பண்படுத்திவிடவேண்டும். தத்துவ விசாரங்களும் ஆத்தும விசாரங்களும் செய்வதிற பயனில்லை. யாவரிடத்திலும் அனுதாபமுடையவர்களா யிருப்பது, அதாவது பிறர் நம்மிடத்தில் எவ்விதமாய் நடக்கவேண்டுமென்று நாம் விரும்புகிறோமோ அவ்விதமாகவே நாம் பிறரிடத்தில் நடப்பது நமது கடமை என்பதை முதலில் பிள்ளைகளுக்குக் கற்பித்து, பின்பு அதைக்கொண்டு நல்வழியில் நடப்பதற்கு வேண்டிய பல நற்குணங்களையும் கற்பிக்கவேண்டும். தருமம், தயை, ஈவு, இரக்கம், உண்மை, அடக்கம், அன்பு, உழைப்பு, ஆட்சி, ஆண்மைத்திறம் முதலிய உலகவாழ்க்கைக்குவேண்டிய பல நற்குணங்களும், கர்வம், கொடுமை, பொறாமை, கள்ளம், கபடம், மோசம் பெருமிதச்செலவு முதலிய பல தீக்குணங்களும் ஆகிய இவற்றையெல்லாம் தெளிவாய்த் தெரிவிக்கவேண்டும். இக்குணங்களையும் இவற்றால் விளையும் குணதோஷங்களையும் நாமே எடுத்துக் காட்டுவதைவிட, அவரவருடைய அனுபவத்தையும் புத்திநுட்பத்தையும் சாமர்த்தியத்தையுங் கொண்டு பிள்ளைகள் தங்களுக்குத் தாங்களே தக்க

உதாரணத்துடன் அக்குணங்களின் நன்மை தீமைகளை எடுத்துக் காட்டும்படிச் செய்தால், தற்காலத்தில் அதனால் அப்பிள்ளைகளுக்கு மிக்க உற்சாகமுண்டாவதோடுகூட, அவ் விஷயங்களெல்லாம் அவர்களுடைய மனதில் நன்றாய்ப் பதிந்துபோம். இப்படி அவற்றை ஒருதரம் எடுத்துக்காட்டுவது போதாது; ஒன்றுமாற்றி யொன்றாய்ப் பலதினங்களில் பல முன்னோர்களுடைய சரித்திரங்களையும் பிரபஞ்சத்திலுள்ள பல நியாயங்களையும் உதாரணமாகக் காட்டிப் பலவாறு போதிப்பிக்க வேண்டும்: அப்போதுதான் அவற்றின் நன்மை தீமைகளெல்லாம் பிள்ளைகளுக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல நன்றாய் விளங்கும். பின்பு அவர்கள் தீக்குணங்களைவிட நற்குணங்களையே கையாளத் தலைப்படுவார்கள். இக்குணங்களைப் பிள்ளைகளுக்குப் போதிப்பிக்கும்போது போதகர்களுடைய குணமும் நடத்தையும் அதற்கேற்றபடியே இருக்க வேண்டும். மேலும் போதகர்கள் பிள்ளைகளிடத்தில் அதிக நேசம் பாராட்டிச் சிரிப்பும் விளையாட்டுமாகவே நீதிகளைப் போதிப்பார்களானால், அப்போது அவை மிகவும் உறுதியாகப் பிள்ளைகளின் மனதில் பதியும். இவற்றோடுகூடப் பிள்ளைகளை அடக்கியாளுந் திறமை உபாத்தியாயர்களுக்கு அவசியமானது.

"இவ்விதமாக விதிகளைப் பிள்ளைகளின் மனதில் பதியச்செய்ய உதாரணங்கள் இன்றியமையாதிருப்பதுபோல், உதாரணங்களிலுள்ள விஷயங்களைத் தெளிவாக்க விதிகளும் தக்கபடி சேர்ந்திருக்கவேண்டும். இவற்றிற்கெல்லாம் முக்கியமாய் உபாத்தியாயர்களுடைய சாமர்த்தியம் அவசியமானது, பிள்ளைகளுடைய தேர்ச்சிக்குவேண்டிய பல வழிகளையும் நன்றாய் ஆய்ந்தோய்ந்து பார்த்து உபாத்தியாயர்கள் பிள்ளைகளுக்குக் கற்பிப்பார்களானால், அப்போது பிள்ளைகள் உலகத்தில் நல்லவர்களென்று பேர்பெற்றுத் தங்கள் வாழ்நாளைச் செம்மையாய்ப் போக்கத் திறமையுடையவர்களாவார்கள்."

இது சுமார் 40-வருஷங்களுக்குமுன் எழுதப்பட்டது. இன்றைக்கும் இவையெல்லாம் அமையும்படியிருப்பது விவேகசிந்தாமணியில் இதைப்பற்றி நாம் சமீபத்தில் எழுதிவந்ததை வாசித்து உண்மையறிந்து கிரகித்தவர்களுக்கு நன்றாக விளங்கும்.

## THE USE OF TOYS IN THE EDUCATION OF CHILDREN.

## குழந்தைகளும் விளையாட்டுக்கருவிகளும்.

குழந்தைகள் எங்கும் விளையாட்டுப் பிரியர்களாயிருக்கிறார்கள். இப்பிரபஞ்சவாழ்வே ஒரு விளையாட்டாகச் சொல்லப்படுகிறது. அப்படியானால் இப்பிரபஞ்ச நாடகத்தில் ஆடப் பிறந்தவர்கள் ஆரம்பந்தொட்டே விளையாட்டிற் பிரியர்களாயிருப்பது சகஜந்தானே. குழந்தைகளுக்கியல்பாயுள்ள விளையாட்டுப்பிரியத்தைத் தக்கபடி வளரவிட்டு அதன் வளர்ச்சியைச் சமயோசித சாமர்த்தியத்தோடு தக்கவாறு மேற்பார்வைசெய்து நடத்திவருவதே வித்தியாப்பியாசமாகும். குழந்தைகளைச் சுபாவத்தில் வளரவிட்டு குற்றநற்றமறிந்து குற்றத்தைநீக்கிக் குணத்தை வளர்த்து நாலாவிதத்திலும் குழந்தைகள் சமதோரணையாக விர்த்தியடைந்து வரப்பார்த்து வருவதே கிண்டர்கார்டன் முறையென்று சொல்வதாம். இந்த முறையைச் சரிதோரணையாகக் கண்டுபிடித்து வெளிப்படுத்தினவர், ப்ரோபெல் என்னும் ஜர்மனி தேசத்தவர் ஒருவர். இவர் தம் ஆயுள் கால முழுவதையும் குழந்தைகளை வளர்க்கும் விதத்தையறிந்து முறைப்படுத்திச் சீர்ப்படுத்துவதில் கழித்தார். ஆகையால் இம்முறை காரணப்பெயரால் இவர் பெயர்பற்றி ப்ரோபெல் முறையென்று வழங்குகிறது.

இவர் கண்டுபிடித்தது ஒன்றும் நூதனமல்ல. இவர் காலத்துக்குமுன் ஜனங்கள் உணராத உண்மைகளை, இவர் ஆராய்ந்தும் ஊகித்துமுணர்ந்து அவ்வுண்மைகளை உபயோகிக்கும் வழியையும் கண்டுபிடித்து ஒழுங்குபடுத்தினதே இவர்செய்த பெரிய வேலை. "இப்புவியில் இல்லாததொன்றில்லை இளங்குமரா" என்று ஸ்ரீராமர் லக்ஷ்மணனுக்குச் சொல்லியபடி இவ்வுலகில் இல்லாததொன்றுமில்லை. எல்லாம் புராதனமானதே. ஆனால் அதுதன் குணகுணத்தையறிந்து குற்றத்தை

நீக்கிக் குணத்தை வழிப்படுத்தி உபயோகிப்பதே விசேஷமாம். இந்த மர்மம் நமக்குத் தெரியவரும் வரையில் உள்ளனவெல்லாம் இருந்தும் நமக்கு இல்லாதனவேயாகும். பிரபஞ்சத்திலுள்ள சூக்ஷ்மவிலாச யுத்திகளின் மர்மத்தை யறிந்துகொள்ளும்போதே நாம் அவைகளின் இருப்பை உணர்ந்தவர்களாகிறோம். இந்த உணர்வு நமக்கு உண்டாகும்போதே ஒன்றை நாம் கண்டுபிடித்ததாகச் சொல்கிறோம். அதாவது நம் புத்திக்குப் புலப்படாமல் மறைந்திருந்ததைக் கண்டுபிடித்ததாகச் சொல்கிறோம். ஆகையால் இப்படிக் கண்டுபிடித்த விஷயமோ, வஸ்துவோ, முறையோ, எதுவோ ஒன்றைப்பற்றி விவரிக்குங்கால் அதில் சில பல பாகங்கள் நமக்குத் தெரிந்ததாக விருத்தலால் இதிலென்ன அதிசயமென்று நிராகரித்துப்பேசுவது சரியல்ல; அப்படிப் பேசுவது யுக்தி புத்தி இரண்டிற்கும் ஒவ்வாததாகும். இந்த வழக்கம் நம்மவர்களுக்குள், விசேஷமாய் நமது பெண்பாலார்களுக்குள், அதிகமாய் உண்டு. இதனால் நேரும் கெடுதி மிகுதி. ஊகமாய் யுக்திபுத்தியோடு எதையும் உற்றுநோக்கி ஆராயும் வழக்கம் படியப்பெற்றூருக்கு அவர் கண்முன்படும் எவ்வளவு சாதாரணமாகத் தோன்றும் வஸ்துவும் ஓர் அதிசயக் களஞ்சியமாகுமென்பதிற் சந்தேகமில்லை. மின்னலையறியாதார் யாருமில்லை. மின்சாரமென்பது மின்னலின் சக்தியேயன்றி வேறல்ல. மின்சாரத்தினுதவியால் வண்டியோடுவதையும், ஒளிவிளக்கு வெளிச்சம் தருவதையும், பேசுந் தந்தியாலும், அடிக்குந் தந்தியாலும் வெகுதூரத்திலுள்ளோர் 'வாயு வேகம், மனோவேகம்' என்று உவமித்துச்சொல்லும் மிகுதியான வேகத்திலும் அதிக வேகமாகக் கலந்துபேசிக் கொள்வதையும் பார்த்தால் எவ்வளவு அதிசயமாகவிருக்கிறது பாருங்கள்.

சிலநாள் முன் நாட்டுப்புறத்திலிருந்துவந்த ஒரு புத்திசாலி சென்னையில் டிராம்வண்டியோடுவதைப்பார்த்து மிக அதிசயப்பட்டு அது எப்படி ஓடுகிறதென்பதை விளக்கும்படி மிக வருந்திக்கேட்டார். நான் மின்சாரத்தின் உதவியால் ஓடுகிறதென்றும் மேலேபோகும் கம்பிவழியாக வரும் மின்சார ஓட்டம் யானையின் துதிக்கைபோல் வண்டியின் மேற்றட்டிலிருந்து வளைந்துசென்று கம்பியை ஒட்டி உருவியோடும் சிறு சக்கரத்தின்வழியாக வண்டியிலிறங்கி அதன் கீழே வண்டியோடும் உருளைகளை ஒட்டி அமைந்திருக்கும் யந்திரத்திற்சென்று உருளைகளைச்சுற்ற, வண்டியோடுகின்றது என்றும் சொன்னேன். இது ஒன்றும் விளங்காதவராய் மின்சாரமாவது வண்டியோட்டவாவது என்று நம்பிக்கையற்றுப் பேசினர். மின்னலுக்குச் சக்தியிருக்கிறதென்று தெரியுமா? வானத்தில் தோன்றும் மின்னல் நம் கண்ணைப் பரித்துக்கொண்டு போவதில்லையா? மரத்தில் அல்லது கட்டடம் கோபுரத்தில் விழுந்து தகர்த்துவிடுவதில்லையா என்று கேட்டேன். அதற்கு அவர் "ஆம் சரிதான். ஆனல் இந்த மின்சாரம் என்பது மின்னலைப்போல் இல்லையே. வண்டியில் தெரியும் மின்சார வெளிச்சம் மின்னல் வெளிச்சம்போலவா விருக்கிறது என்றார்.

இவருக்கு வாயாற்சொன்னல் விளங்காது என்று மின்சாரத்தின் மின்னலை முதலில் காட்டுகிறேன், அப்புறம் பேசலாமென்று சொல்லி வார்த்தையை நிறுத்திவிட்டு அவரை வீட்டிற்கழைத்துவந்தேன். அன்று சாயங்காலம் அவரை யழைத்துக்கொண்டு 'டிராம்வே' மூலைதிரும்பும் ஓரிடத்தில் கொண்டுபோய் நிறுத்திக்கொண்டு வண்டி வந்து இந்த மூலை திரும்பும்பொழுது மேலும் கீழும் கண்ணுக்கு மறைந்திருக்கிற மின்சாரம் மின்னலாகத்தோன்றும் பாருமென்று சொன்னேன். வண்டி வந்து திரும்பும்பொழுது மேலும் கீழும் உரைசல் அதிகமாக உண்டாகப் 'பளிச், பளிச்' என்று மேலே கம்பியிலும் கீழே வண்டியுருளை தண்டவாளத்தைத் தொடுமிடத்திலும் மின்னல் தோன்றியது. அதைப் பார்த்தவர் "மின்னலிருக்கிறது இப்பொழுது தெரிந்ததையா, எப்படியோ மின்லைப்பிடித்து மேலே

கம்பியிலும் கீழே சக்கரத்திலும் மாட்டிவிட்டான்; அது ஓடுகிறது. எல்லாந் தெரிந்துவிட்டது வாருங்கள்" என்றார்.

சற்றுமுன் ஒன்றுந் தெரியவில்லை யென் நீரே இப்பொழுது எல்லாந் தெரிந்துவிட்டது என்கிறீரேமின்னல் மின்சாரமாக விருக்கிறது ஒன்று தெரிந்தால் மற்றதெல்லாம் தெரிந்துவிட்டதா? அது எப்படி?" என்றேன்.

"எப்படியோ "மின்னலைப் பிடித்துவிட்டான். அப்புறம் அதைக்கொண்டு ஓடச்செய்வதில் என்னவிருக்கிறது. அது ஒரு சொப்படிவித்தை" என்றார்.

மின்சாரமென்பது மின்னலையொத்தது. மின்னல் அவர் கண்ணுற் கண்டது: மின்சாரத்தையும் கண்ணுற் கண்டாய்விட்டது. ஆகவே அவர் இனி அறிந்துகொள்ளவேண்டிய அதிசயம் அதிலொன்றுமில்லை! அவர் புத்திக்குப் பட்டது அவ்வளவுதான். இப்படி நுனிப்புல் மேய்ந்து எல்லாமறிந்துவிட்டதாகப் பாவிக்கும் புத்தி நம்மவர்க்கு அதிகமுண்டு.

இதையடக்கி எதையும் ஆழ அறிந்து ஆராய்ந்து தெரிந்துகொள்ள வேண்டுமென்கிற புத்தியும் அதற்கு வேண்டியமன உறுதியும் திடசித்தமும் உண்டாகப் பயிலவேண்டும். இப்பயிற்சியுண்டாக எதையும் அரைகுறையாக அறிந்ததிலிருந்து எல்லாந் தெரிந்துவிட்டதாகப் பாவித்துத் திர்ப்தியடையும் சித்தம்கூடாது

எதையும் ஆய்ந்தோய்ந்து ஆழ்ந்துணரும் சக்தியும் அதற்குவேண்டிய சித்தமும் உண்டாகவேண்டும். இது உண்டானுல் விர்த்திக்கு மெத்த அனுகூலம் உண்டு. இக்குறை மிகவும் முக்கியமான குறையாக விருப்பதால் இதை நிவர்த்தித்துக்கொள்ளவேண்டியதின் அவசியத்தைக் குறித்து இவ்வளவு தூரம் வற்புருத்தி யெழுதினேம். இனி நாம் எடுத்துக்கொண்ட விஷயத்தைக்குறித்துப் பேசுவோம்.

விளையாட்டுக்கருவிகள் வித்யாப்பியாசத்திற்கு மிகவும் இன்றியமையாதன. விளையாட்டுக்கருவிகள் உபயோகிக்காத குழந்தைகள், உலக விஷயங்களைக் கிரகித்துக்கொள்வதில், அவை உபயோகிக்கும் குழந்தைகளைவிட மந்தமாகவே யிருக்கும்.

சித்திர விசித்திர வேலைகளிற் சிறந்தவர்கள் விசேஷமாயுள்ள தேசத்தார் தங்கள் குழந்தைகளுக்கு விளையாட்டுக்கருவிகள், படங்கள் முதலியன யதேஷ்டமாகக் கொடுத்து வளர்ப்பவர்களா யிருக்கிறார்களென்பது பிரத்தியக்ஷாநுபவத்திலறிந்தவிஷயம். சிறு குழந்தைகளுக்கு இவ்வுலகவிஷயங்கள் அவர்கள் புத்திக்கெட்டாத பெரியனவாகவிருக்கின்றன.

ஆகையால் குழந்தையின் பச்சைப்பிராயத்துக்குத் தக்கபடி விளையாட்டுக் கருவிகளால் அவர்களுக்கு ஒரு சிறு உலகம் சிஷ்டித்துக் கொடுக்கவேண்டும். நல்ல ஆடையாபரணங்களணிந்த ஒரு ஸ்திரீயைக்கண்டால் சிறிதும் கவனியாத குழந்தை சிறிய பொம்மை அல்லது மரப்பாய்ச்சி ஜோடித்து வைத்திருப்பதைக்கண்டால் சந்தோஷம் பொங்கிக் குதூகலப்படும். பச்சைப்பிராயமான குழந்தைகளின் அறியாத்தன்மைக்கும் உலக சம்பந்தமான பெரிய காரியங்களுக்கும் இடையே அதபாதாளமான இடைவெளியிருக்கிறது. இந்த இடைவெளியைத் தாண்டிச்செல்ல விளையாட்டுக்கருவிகள் குழந்தைகளுக்கு ஒரு பாலம் போல் உதவுகிறது.

ஆகையால் குழந்தைகளுக்கு பொம்மைகளும், சொப்புகளும், மற்ற விளையாட்டுக் கருவிகளும், படங்களும் விளையாடக் கொடுக்கல் வேண்டும். விளையாடக் கொடுப்பதன்றி குழந்தைகளது விளையாட்டில் நாம் சிரத்தையுயெடுத்துக்கொள்ளல்வேண்டும். நம்மவர்கள் குழந்தைகள் என்னவோ விளையாடிவிட்டுப் போகின்றன. உபத்திரவம் செய்யாமலிருப்பதொன்றே போதும என்று இருப்பது வழக்கம். அப்படியிருப்பது சுத்தப்பிசகு. குழந்தைகள் விளையாடும் பொழுது அவர்களுக்கு நூதனமான எண்ணங்களும் கருத்துக்களும், சரி, தப்பு என்கிற விவரங்களும் உண்டாகின்றன.

இவைகளையெல்லாம் நாம் கவனிக்காவிடில், குழந்தைகளின் மனதை யறிந்து, அவர்கள் மனோவிர்த்தியை ஒழுங்குபடுத்தும் மார்க்கத்தையிழந்துவிடுகிறோம்.

குழந்தைகள் பொம்மை வைத்து விளையாடுகையிலே நன்னடக்கை, சன்மார்க்கவழி இவைகளையறிந்துகொள்ளத் துவக்குகின்றனர். அப்பொழுது நாம் அவர்கள் விளையாட்டைக் கவனித்துக்கொண்டிருந்தால், அவர்கள் பிசகிப் போகும் தருணம் பார்த்து அவர்கள் மனதை நல்வழியில் திருப்பலாம்.

பொம்மை அல்லது மரப்பாவைவைத்து விளையாடும் பொழுது குழந்தைகளுக்கு, சரி, தப்பு—விவரமும், நல்லதில் விருப்பும், கெட்டதில் வெறுப்பும், அனுதாபம், இரக்கம், ஆதரவு முதலிய குணங்களும் நன்னடக்கையில் பற்றும் உண்டாகின்றன. குணங்களெல்லாம் அப்பொழுதுதான் முளைக்க ஆரம்பிக்கின்றன.

குழந்தைகளுக்கு ஊகபுத்தி அதிக ஜாஸ்தியாகையால் அவர்கள்முன் பெற்றோர் நடத்தை சிறிதும் வழுவற்றதாக விருக்கவேண்டும். குழந்தைகளை அலக்ஷியமாக நடத்துவதும் அவர்களிடத்து அநுதாபமின்றிப் பேசுவதும் மகா கெட்டகுணங்கள். இந்த நடத்தைகளையெல்லாம் குழந்தைகள் அறிந்துகொண்டு அவைகளை நன்றாகப் பற்றிக்கொள்கின்றனர். குழந்தைகள் விவரம் தெரியாதவர்கள் தானேயென்று மூடமதிகளான பெற்றார் உற்றார், அவர்களிடத்து இல்லாத சாக்குப் போக்குகளெல்லாம் சொல்லி ஏமாற்றுகிறார்கள். பிறகு குழந்தைகள் தாங்கள் ஏமாற்றப்படுவதைக் கண்டுகொண்டு இவர்கள் சமாதானத்தில் நம்பிக்கையிழந்தவர்களாகக் காட்டினால், குழந்தையின் புத்திகூர்மை யைப்பற்றிக் கொண்டாடிச் சந்தோஷப்படுகிறார்களேயன்றி, தாங்கள் தம் குழந்தைகளுக்குக் கெட்ட உதாரணங் காட்டிப் பொய், சூது, வினை முதலிய கெட்ட குணங்களெல்லாம் முளைப்பதற்கு வித்தாயிருக்கிறார்களேயன்றி தங்கள் மூடத்தனத்தைப் பற்றி விசனக்கிறார்களில்லை.

நமது குழந்தைகள் சிறுபிராயத்திலே பொய், புளுகு, சூது, வினை சொல்லத்தெரிந்தவர்களாயிருப்பதற்குக் காரணம் பெற்றோர்கள், விசேஷமாய் தாயார், அத்தை, பாட்டிமார்கள் குழந்தைகளிடம் பொய்சொல்லி அவர்களை ஏமாற்றிவரும் கெட்ட வழக்கத்தினாலேயே உண்டாகின்றது. மிகவும் சிறிய ஒரு குழந்தையினிடத்து ஏதாவது துர்க்குணங்கள் இருக்கக்கண்டால் அக்குழந்தையின் தாய், பாட்டி, அத்தை அல்லது அக்குழந்தையோடு அதிகமாகப் பழகும் வேறு யாரோ அவர்களிடத்து அத்துர்க்குணங்கள் இருக்கின்றனவென்று நிச்சயமாய்ச் சொல்லலாம். நமக்குள் தாய்மார்கள் பச்சைப்பாலன்கள் மனதில் நாம் மேற்காட்டியபடி பொய், சூது, வினை முதலிய கெட்ட வித்துக்களைத் தாங்களே விதைத்துவிட்டுப் பிந்தி அவ்வித்துக்கள் முளைத்துக் களைக்கும்பொழுது குழந்தைகள் கெட்டவர்களென்று அவர்களைக் கண்டிக்கிறார்கள். இதனால் அவர்கள் தங்கள் அறியாமையைக் காட்டுவதுமட்டுமன்றிப் "பண்டமொருபக்கம் பழியொருபக்கம்" என்கிற பழமொழிப்படி குற்றம் தங்களிடத்திலேயிருக்க, வீணாய்க் குழந்தைகளைப் பிடித்து ஹிம்சிக்கிறார்கள்.

குழந்தைகள் விளையாடும்பொழுது ஊக்கமாய்ப்பார்த்துக் கவனித்துக்கொண்டு வந்தால், வேண்டியபொழுது நாமும் அவர்களோடு கலந்துகொண்டு விளையாட்டு மூலமாகவே அவர்களிடத்துக்காணும், துர்க்குணங்களை ஆரம்பத்திலேயறிந்துகொண்டு அவை குழந்தைகள் மனதிற் பதியாதவண்ணம் எளிதில் அவைகளை மாற்றி, குழந்தைகளின் குணத்தை நல்லவழியில் திருப்பிவிடலாம்.

இப்படிச் செய்ய நம்மிடத்தில் நல்லகுணம் உண்மையிலிருக்கவேண்டும். ஒன்றில் நமக்கே பற்றின்றி யிருக்கையில் அதைக்குழந்தைகளுக்குப் போதிக்க யத்தனித்தால், நாம் கற்றுக்கொடுக்க யத்தனிப்பதைவிட, நாம் பாசாங்கு செய்வதையே குழந்தைகள் எளிதாகக் கற்றுக்கொள்ளும்.

ஒரு தீக்குணம் படிந்தபின் நீக்க யத்தனிப்பதைவிட அது படியாமற் காப்பது எப்போதும் எளிதாகையால், குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பு வாய்க்கப்பெற்றோர் அப்பொறுப்பைப் பிழையின்றி வகித்துச் சமாளித்து வருவதற்குவேண்டிய முயற்சி செய்யவேண்டும்.

இதற்கு முதலாவது பெற்றோரிடத்துப் படிப்பும் புத்தியும் வேண்டும். இது இல்லாதவர்க்குப் பத்திரிகை வாயிலாகப் புத்திபோதிப்பது இயலாத காரியமாதலால் இந்த இரண்டு முக்கிய குணங்களும் இதை வாசிப்போரிடத்து இருக்கிறதாகப் பாவித்துக்கொண்டு, அவர்கள் தங்கள் கடமையைச் செலுத்துவதற்குதவியாகச் சில குறிப்புகளை அடுத்த முறை இத்தலைப்பெயரின்கீழே எடுத்தெழுதுவோம்.

---

## சைதாப்பேட்டை வித்யாபோதன பொருட்காட்சி.

சைதாப்பேட்டை "டீச்சர்ஸ் காலேஜில்" வித்யாபோதனா பொருட்காட்சி வைத்திருந்ததைப் போய்ப் பார்த்தவர்கள் பிரகிருதி வித்தைக்கும் மற்ற எந்த விதமான வித்யாபோதனைக்கும் மண்ணாலும் மரத்தாலும் சித்திரத்தாலும் அமைந்தமாதிரி உருவங்கள் எவ்வளவு அவசியமென்றறிந்துகொள்வார்கள். விளையாட்டில் வித்தை போதிப்பதே உண்மையான வித்யாபோதனையாம். மனஉற்சாகமின்றி வித்யாபோதனை மனதிற் பதியாது. இந்த உண்மையை நம்மவர்கள் நன்றாக உணரவேண்டும்.

## THE BEAUTIES OF KAMBAN.

## கம்பநாட்டார் காப்பிய அழகுகள்.

"ஈவது விலக்கேல்"

பின்வரும் செய்யுட்கள் ஸ்ரீமத் கம்பராமாயணம் பாலகாண்டம் வேள்விப் படலத்தில் மாவலி வரலாற்றில் மாவலி தன்பால் மூவடி மண்ணேற்ற வாமனமூர்த்திக்குக் கொடுக்கவுற்ற தானத்தைக் கொடுக்க வேண்டாமென்று தடுத்த சுக்கிராசாரியனை நோக்கிக் கூறியவை.

1. நீனைக்கிலை, யென்கை மிளிர்ந்திட, வந்து
தனக்கியலாவகை, தாழ்வது தாழ்வில்
கனக்கரியானது கைத்தல மென்னின்,
எனக்கிதன் மேல்நல மியாதுகொல்? என்றான்

(இ-ள்.) ஏ! சுக்கிராசாரிய! நீ ஆலோசனையில்லாமல் சொல்லுகின்றாய். என்கை மேலாக எனக்கு முன்வந்து தன் மேன்மைக்குக் குறைவாகும்படித் தாழ்ந்து "தா" வென்று நீட்டுவது மேலாகிய ஸ்ரீமந் நாராயணமூர்த்தியின் திருக்கரமேயானால் எனக்கு இதனில் மேலாகப்பெறத்தகும் நன்மை யாதுள்ளது? என்று மாவலி சொன்னான்.

'ஏற்பதிகழ்ச்சி' யாதலின், தனக்கியலாவகை தாழ்வது என்றார். அகில லோகங்களுக்கும் நாயகனாகிய பெரியோன் என்பது தோன்ற தாழ்வில் கனக்கரியான் என்றார். கனம்-மேகம். 'எனக்கிதன்மேல் நலம் யாது? ஒன்றும் இல்லை யென்பதை வற்புறுத்தியது. மேலோர் தம்மிடத் தொன்றை ஏற்கப்பெறுவது கீழோருக்குப் பெருமையாதலின் அவ்வாறு கூறினன். (1)

2. துன்னினர் துன்னல, ரென்பது சொல்லார்
முன்னிய நன்னெறி நூல்வலர் முன்வந்
துன்னிய தான மூயர்ந்தவர் கொள்க
என்னி, னிவன் றுணை யாவ ருயர்ந்தார்?

(இ-ள்.) தமக்கு முன் வந்து தாம் கொடுக்கக் கருதிய தானத்தை உயர்ந்தோர் ஒருவர் கொள்ளவரின், அவ்வாறு கொள்பவர் உறவினரென்றும் பகைவரென்றும் வேத சாஸ்

திரங்களைக் கற்றறிந்த பெரியோர்கள் சொல்ல மாட்டார்கள். அவரது உயர்ச்சி ஒன்றையே கருதிக் கொடுப்பார்கள். இப்போது என்முன் ஏற்று நின்ற இந்தத் திருமாலினும் உயர்ந்தவர் யாவருள்ளார்? ஒருவரும் இல்லையாதலின் எனக்கு மற்றொன்றையும் சிந்தியாமல் கொடுத்தலே முறைமையா மென்றனன். (2)

3. வெள்ளியை யாதல் விளம்பினை, மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ வென்சில? வின்னுயிரேனும்,
கொள்ளுதல் தீது, கொடுப்பது நன்றால்.

(இ-ள்.) உன் பெயருக்கேற்ப நீ (வெள்ளியை) அறிவின்மையை யுடையா யாதலின் இவ்வாறு தடுத்துக் கூறினாய். மேலோர்கள் தம் வண்மைக் குணம்விளங்க ஏற்றவர்களுக்குக் கொடுத்தலே முறைமையாகும். அவ்வாறன்றிக் கொடாமல் மறுக்கின், அதனினும் இகழ்ச்சியைத் தரும் செய்கைகள் ஒன்றும் இல்லை. தமது உயிரே கொடுக்கும் பொருளும் கொள்ளும் பொருளுமாயினும் ஒருவரிடம் கொள்ளுதல் இகழ்ச்சியேயாம். ஒருவர்க்குக் கொடுப்பது பெருமையேயாம்.

வெண்மை-அறிவின்மை. எள்ளுவ என்சில-வழங்காது மறுத்தல்போல இகழ்ச்சியைத் தருவன யாவை யென்று வருவித்துப்பொருள் கொள்ளற்பாலது. என்?-என்றது இல்லை யென்றபடி.

இன்னுயிரேனும் எவ்வளவு அருமையான பொருளாயினும், ஒருவர்க்கு உயிரினும் சிறந்ததில்லை யாதலின் அங்ஙனம் கூறினர். (3)

4. மாய்ந்தவர் மாய்ந்தவரல்லர்கள், மாயா
தேந்திய கைகொடிரந்தவ ரெந்தாய்!
ஈய்ந்தவ ரென்பவர், வீய்ந்தவ ரேனும்
ஈய்ந்தவ ரல்ல திருந்தவர் யாரே.

(இ-ள்) உலகத்தில் காலகதியினாலே உயிரிழந்தவர்கள் இறந்து போனவரல்லர். அவர்களுக்கு நேரும் துன்பம் அவ்வளவு பெரிதன்று. வறுமையால் வருந்தி யிரப்பவர்களே, உயிரோ டிருப்பினும் இறந்தவரென்று சொல்லத்தக்கவர். அதாவது இரப்பவர்களுக்கு நேரும் துன்பம் இறத்தற்றுன்பத்தினும் பெரிதாகும் என்றபடி. தமது பூதவுடம்பழியப் பெறினும் ஈகையினாலேபுகழுடம்பைப் பெற்றவர்களே இறந்தபோதினும் இறவாதிருக்கப் பெற்றவராவர்.

இரந்தவர் வீய்ந்தவரென்றது துன்பம்பற்றியன்றிச் சிறுமைபற்றி யாயினுமாம். உயிரிருந்தும் நடைப்பிணமாவார்கள் என்பதாம். (4)

5. அடுப்ப வரும்பழி செய்குரு மல்லர்,
கொடுப்பவர் முன்பு கொடேலென நின்று
தடுப்பவ ரேபகை, தம்மையு மன்னர்
கெடுப்பவ ரன்னதோர் கேடிலை யென்றான்.

(இ-ள்). ஒருவருக்குப் பகையாவார் அடுத்தடுத்து மிகுதியாகப் பொறுத்தற்கரிய தீங்குகளைச் செய்பவர்களேயல்லர். பின்பு யாவரென்னில், தாம் ஒரு பொருளைத் தானம் கொடுக்கக் கருதியபோது எதிர்நின்று கொடுக்கவேண்டாமென்று தடுப்பவர்களேயாவர். அப்படித் தடுப்பவர்கள் கொடுப்பவர்களைக் கொடாமற்செய்து கெடுத்தலேயன்றித் தங்களையும் கெடுப்பவராவர். ஆகையினாலே கொடுப்பதை விலக்கலினும் கொடிய தீங்கு வேறில்லை யென்றான்.

அறத்தைச் செய்ய வொட்டாமல் தடுப்பவர் இம்மைக்கண்ணன்றி மறுமைக்கண்ணும் கேடுவிளைவிப்பவராதலின் அவரை அரும்பழி செய்பவரினும் மேலான சத்துருக்களாகக் கூறினர். "ஈவது விலக்கேல்" என்றார் ஔவையாரும். (5)

6. கட்டுரையிற்றம கைத்துள போதே
இட்டிசை கொண்டற னெய்த முயன்றோர்
உட்டெறு வெம்பகை யாவது லோபம்
விட்டிட லென்று விலக்கினர் தாமே.

(இ-ள்.) அறநூல்களிற் சொல்லிய உறுதிமொழிப்படித் தம்கையிற் பொருளுள்ள போதே பிறருக்குக் கொடுத்து அதனால் கீர்த்தியும் புண்யமும் பெற முயல்பவர்களுக்கு

ஆத்மலாபத்தைக் கெடுத்துக் கெடுதியை விளை விக்கும் கொடிய சத்துருவாயிருப்பது உலோப குணமாகும். அதுபோலவே கைப்பொருளைக் கொடுக்கவேண்டாமென்று விலக்குகின்றவர்க ளும் பகைவரே ஆவார்கள்.

கைத்து - கையிலுள்ளதாகிய பொருள். பொருள் நிலையன்றாதலின் 'உள்ளபோதே இட்டு' என்றார். கொடுத்தலால் புகழும் அறமும் இரண்டும் ஒருங்கே உண்டாகின் றன. மற்றப்பகைவர் உடலை வருத்துவாரா வர். இவர்களோ உயிரையும் உணர்வையும் அழித்து நரகத்துக்கு ஆளாக்குகின்றாராத லின் 'உட்டெறு வெம்பகை' என்றார்.

வேறு.

7. எடுத்தொரு வருக்கொருவ ரீவதனின்முன்னே
தடுப்பது நினக்கழகிதோ, தகைவில் வெள்ளி!
கொடுப்பது விலக்குகொடியோ யுனது சுற்றம்
உடுப்பதுவு முண்பதுவு மின்றிவிடுகின்றாய்.

(இ-ள்). ஒருவர் தம்பொருளை யெடுத்து யாசகர்களுக்குக் கொடுக்கும்போது அப்பொருளைக் கொடுக்கவொட்டாமல் தடுப்பது உனக்கு முறைமையாகுமா? அற்பபுத்தியை யுடைய சுக்கிரனே! கொடுத்தலை விலக்கும் கொடியோனே! இப்படிச் செய்வது உனக்கு நன்மையன்று. இதனால் நீயேயன்றி உன் சுற்றத்தாரும் உண்ணச் சோறும் உடுக்கத் துணியு மின்றி வறுமையால் வருந்த வேண்டி வரும் நிச்சயம். 'விடுகின்றாய்'-விடுவது நிச்சயம் என்னும் பொருளில் வந்தது.

---

## "PEARLS OF FAITH"

SELECTED AND STRUNG TOGETHER EOR PARENTS AND CHILDREN TO WEAR,

*From the Sayings of St. Vemanna.*

ஆந்திரபாஷையில், பிரஹ்மக்ஞானியும், அருட்கவியுமாகிய,
வேமன்ன மகாகவி அருளிச்செய்த
பத்யங்கள்.

*(Fifth Series.)*

(சித்தவேரற்றால் பிரகிருதிமரம் சிதையும்.)

1. சித்தவே ரற்றாற் சிதைந்திடுமன் றேபகுதிப்
பெற்றியுறு கின்ற பெருமரமங்—கற்றவுடன்
ஆசையெனு நீளு மருங்கவைக ளாரணங்கே
நாசமுறு மேயுலர்ந்து நாடு.

(இ-ள்.) சித்தமாகிய வேர் அற்றதாயின் பிரகிருதி யென்னும் மரமும் அற்று வீழ்ந்துவிடும். அம்மரம் அற்றதாயின் ஆசையாகிய கவைகள் உலர்ந்து நாசமாம்.

(குருவுக்கு மேலானகுரு இன்னவன்.)

2. ஆசையறுத் துச்சினமா மங்கிதனை முற்றவித்துப்
மாசிழையார் பற்றறுத்துப் பாங்காகப்—பேசரிய
உண்மைதனை யோர்ந்தோ னொருவன் குருவுக்கு
வண்மைதரு மெய்க்குருவா மற்று.

---

* This is what he said:—"Long might the ass have lived to eat
The green and tender barley grain,
Accoutred in the lion's skin,
But that he brayed and ruined all."—*The Jataka Tale or Budda's Birth Story.*

(இ-ள்.) ஆசையைநீக்கிக் கோபமாகியதழலை அவித்து காமத்தை யொழித்து அறிதற்கரிய பரமார்த்தத்தை அறிந்தவனே குருவுக்குக் குருவாக மதிக்கப்படுவான்.

(பெரியோர்க்குக் கொடார், வேசையர்க்குக் கொடுப்பார்.)

3. ஊசற்கறியு முதவார் குரவற்கு
வேசைக்குத் தாங்கள்பெறும் வித்தமெலாம்—ஆசையுடன்
ஈவார்க ளம்மாவவ் வேசையரி னும்மிழிந்தோர்
ஆவாரோ வாசிரிய ராங்கு.

(இ-ள்.) பெரியோர்களுக்கு ஊசற்கறியும் கொடுக்கமாட்டார்கள். வேசைகளுக்குத்தாம் தேடிய பொருளெல்லாம் கொட்டிக்கொடுப்பார்கள். இதென்னபுதுமை ! வேசையரினும் அப்பெரியோர்கள் தாழ்ந்தோராவரோ !

(பிறர் குற்றங்களன்றித் தங்குற்றம் பார்க்கமாட்டார்கள்.)

4. குற்றங்க ளாய்வார் தாங் கோடாது கோடியுளார்
குற்றமிலா ராரே குவலயத்திற்—குற்றங்கள்
காண்கின்றார் தங்குற்றங் கன்னனமொழிக் காரிகையே
காண்கிலரே மற்றிதனைக் காண்.

(இ-ள்.) பிறருடைய குற்றங்களை ஆராய்ந்துதேடிப் பிடிப்பவர் உலகத்தில் அநேகருள்ளார்கள். ஆயினும் குற்றமில்லாதபேர்கள் யாவர். எல்லாருக்கும் குற்றமுண்டு. பிறர்குற்றங்களை ஆராய்கின்றவர் ஏன் தங்குற்றங்களைமாத்திரம் ஆராயாமல் விடுகின்றார்கள்.

(நீதியில்லா அதிகாரியைப் பேதைகள் வெகுமானிப்பார்.)

5. வானரத்துக் கோர்புதிய வத்திரத்தைக் கட்டிவிடிற்
கானகத்து மந்தியெலாங் கைகூப்பும்—தானதுபோல்
நீதியில்லா மன்னவனை நேசித்துத் தாம்பணிவார்
பேதையர்கள் பேருலகின் கண்.

(இ-ள்.) குரங்கொன்றைப் பிடித்துப் புதுவேட்டியைக் கட்டிவிட்டுவிட்டால் அதைக்கண்ட மற்றக்குரங்குகளெல்லாம் அதைமகாராஜாவாக வெண்ணிக் கைகூப்பி நமஸ்கரிக்கும். அதுபோல நீதியில்லாமன்னவனை அறிவில்லா மூடர்கள் நேசித்துப் பணிவார்கள்.

(சிநேகத் துரோகிகள்போலக் கோடியவரில்லை.)

6. சொற்பிறழு வானுக்குச் சொல்லுமொரு மானமிலை
அற்பனவன் மற்றோர் துயரறியான்—விற்பழித்த
வாணுதலாய் நட்டதற்பின் வஞ்சிப்பா ரிற்கொடியார்
நீணிலத்தி லில்லை நினை.

(இ-ள்.) சொன்னசொற் றவறுகின்றவனுக்கு மானமில்லை. பிறர் துயரறியாதவன் அற்ப புத்தியுள்ளவன். சிநேகம் செய்தபின் ஒருவரை வஞ்சனை செய்பவர்போலக் கொடியவர் உலகத்திலில்லை.

(வரப்போகிறது ஒருவர்க்கும் தெரியாது)

7. வானமழை பெய்வதுவு மாண்டுயிர் தான் போவதுவும்
தானெவர்க்குந் தேறல் தரமின்றே—மாநிலத்தில்
மற்றிவைதாங் காண்குவரேல் வாய்ந்தகலி யிப்பரிசின்
உற்றுநிக ழும்மோ வுரை.

(இ-ள்.) மழைவருவதும் உயிர்போவதும் ஒருவர்க்கும் அறியமுடியாது. அறிய முடியுமாயின் கலிகாலம் இப்படி நடக்குமா.

(இழிந்தவ னின்னு னென்பது)

8. இழிகுலத்தா னென்று மிளிருடையா னுகான்
மொருபிறழு வானவனே முன்னில்—இழிவுடையான்
பெற்றகுல நிந்தித்த பேதையே மற்றவனின்
முற்றுமிழிந் தோனு மொழி.

(இ-ள்.) குலத்தால் இழிந்தவன் இழிந்தோனுகமாட்டான்; சொன்னசொல் தவறுகின்றவனே இழிந்தோனுவான். இழிகுலத்தானென்று ஒருவனை நிந்திக்கின்றவன் அவ்விழிகுலத்தானிலும் கடையனுவான்.

(கெட்டவர் சகவாசம் கேடுதியே விளைக்கும்.)

9. தீயவரோ டொன்றிச் சிநேகம் புரிந்திட்டால்
மேயவினை யென்றும் மிகுதுயரே—ஆயிழையே
ஓங்குபனைக் கீழிருந்தங் குண்பதுபா லேனுமது
தீங்குறுகள் ளாமே தெரி.

(இ-ள்.) கெட்டவர்களோடு சிநேகம் செய்தால் துன்பமேயன்றிச் சுகமுண்டாகாது. பனைமரத்தின் கீழிருந்து பாலைக்குடித்தாலும் கள்குடித்தா னென்பார்கள்.

(ஈனரைச் சேவித்துப் பயனில்லை.)

10. எத்தனைநாட் சேவித்து மீனமதி யாளர்தமைப்
பெற்றிடுவ தொன்றுமிலை பேசுபயன்—முற்றிழையே
பாலென்று மீயா மலட்டுப் பசுவையணைந்
தாலென்ன நல்கு மது.

(இ-ள்.) ஈனபுத்திடைய பிரபுக்களை எத்தனைநாட் சேவித்தும் பயனில்லை.

(உலோபிக ளொன்றும் கொடார்.)

11. பாலீயாத் துட்ட மலட்டுப் பசுவதனைக்
காலணைத்து பற்றிற் கடிந்தெரிதல்—போதுமதி
யொன்றுமுக நங்கா யுலோபியர்பாலோர்பொருளைக்
சென்றிரத்த லென்றே தெரி.

பாலீயாத மலட்டுப்பசுவைக் கிட்டிக் கறப்பதனுல் பயனுண்டா?

## THE BOYHOOD OF GREAT MEN OF THE WEST.

### II. Dr. Johnson :

## மேற்றிசை மேதையோர் பாலிய சரிதை.

### II. டாக்டர் ஜான்சன்.

விருத்தம்.

மின்னு மேற்றிசை மேதையோர் பாலிய
நன்னயச்சரி தந்தனை நற்றமிழ்ச்
சொன்னயம் பெறச் சொற்றிட வசனமாய்
மன்னருட்கலை மாமகள் காப்பரோ.

---

சிறப்புற்றோங்கிய ஐரோப்பா கண்டத்தின்கண் நடுநாயகம்போல் துலங்கி விளங்கும் ஆங்கில நாட்டுப் புலவர்கள் பலருள் குறை குணங் கூறுவதில் வன்மை வாய்ந்த டாக்டர் ஜான்சன் என்பவரைப்பற்றிய பாலிய விருத்தாந்தத்தைச் சிறிது புகல்வோம். இவர் சிறுவயதில் வறுமைப் பிணியால் வருந்தினராயினும் தம்புத்தி வன்மையால் அவற்றைச் சிறிது மோராமல் வாணாளைச் சுகமே கழிக்கும் திறமைபூண்டனர். அழியா உடம்பெய்தினராய் 18-ம் நூற்றாண்டுப் புலவர்களில் இவர் சிகாமணியாய் விளங்கினர். ஜனங்களிடத்தில் அதிக செல்வாக்குப் பெற்று விசேட மதிப்புக்கு பாத்திரமாயினர். கல்வி கேள்விகளில் வல்லோர் இவருடைய நடை உடை பாவனைகளைப் பற்றியும், சினேகிதர்களுடன் அமுதுண்ணும் போழ்து இவர் பேசிய வியக்கத்தக்கதும் பரிகாசமுமான கூற்றுகளைப் பற்றியும் எடுத்தோதி அகமகிழ்வர். இவர் 1709-௵ செப்டம்பர் மாதம் 18-ம் தேதி லிச்பீல்ட் (Lichfield) என்ற பட்டணத்தில் பிறந்தார். இவர் தகப்பனார் மிகேயல் ஜான்சன் (Michael Johnson) (Derby) தர்பிமாகாணத்தவர். இவர் உயர்குடிப் பிறப்பின் மாட்சிமையடையப் பெற்றிலரேனும், புத்தக வியாபாரத் தொழிலை மேற்கொண்டு உஜ்ஜீவித்து வந்தார். தாயார் வூர்செஸ்டர்ஷயர் (Worcestershire) மாகாணத்தில் ஒரு சிறந்த குடித்தன மரபிற் பிறந்து வளர்ந்தவள். பெற்றோர்களின் குணாதிசயங்கள் குழந்தை ஜான்சனிடம் பொலிவுற்று பிற்காலம் விளங்கிற்று. மிகேயல் ஜான்சன் இலத்தீன் பாஷையில் ஒரு சிறந்த வித்வானானதால் அவர் நன்கு மதிக்கப்பட்டு மேஜஸ்திரேட் வேலையில் நியமனம்பெற்றார். என்றாலும் அவருடைய நிலைமை பரிதபிக்கத்தக்கதாகவே யிருந்தது. இவர் ஓர் உயர்தரவாலயச் சீடரும் (High Church) ஜெகோபைட்ஸ் (Jacobites)* என்ற கூட்டத்தைச் சேர்ந்தவராதலின் தம் மகனும் இளமைப் பருவமுதற்கொண்டே. தான் கொண்ட பிடிவாதமான கொள்கைகளையே பிறர் மனம் நோவச்செய்யினும் சிறிதும் கவனியாமல் நிலைநிறுத்துவதிலேயே கண்ணாயிருந்தனன்.

இவர் தாயார் கல்வித்தேர்ச்சியற்றவளேனும் விவேகமும்,யுக்திசாதனங்களும்நிரம்பப்பெற்றவள். பிற்காலம் தன் மகனை ஆசாரசீலனாயும் தீவிர தெய்வபக்தி யுடையவனாகவும் செய்யக் கருதி தினந்தோறும் மதக்கிரந்தத்தினின்றும் பாடங்களைக் குறிப்பிட்டு அவற்றை வீட்டு வேலைக்காரனொருவனிடத்தில் ஒப்புவிக்கும்படியாய் திட்டஞ்செய்தாள். இவ்வேற்பாட்டால் அவரது ஞாபகசக்தி பாலியத்திலேயே விருத்தியடைந்து வருவதற் கேதுவாயிற்று. இவரைப்பற்றி விசேஷமாய் சரித்திர ரூபமாய் எழுதியிராநின்ற பாஸ்வல்(Boswell) என்பவர் இவ்விளைஞரது ஞாபகசக்தியைப் புகழ்ந்து பின்வருமாறு கூறியுள்ளார். "சிறு பாலகனான தன் மகனுக்கு எழுத்துக்கூட்டி வாசிக்கத்தெரியவே தாயார் ஸ்தோத்ரம்பாட புஸ்தகத்தை கையிற் கொடுத்து படித்து ஒப்புவிக்கும்படி உத்தரவு செய்துவிட்டு மாடப்படியின்மீது போகத்தொடங்கினாள். அம்மாது அப்படி அவர்களையெல்லாம் கடந்து செல்லுமுன்னர் தனக்குப் பின்னால் குழந்தை ஓடி வருவதைக் கண்டு வெகுண்டு ஏன் படியாமல் பின் தொடர்ந்து வருகிறாயென விரட்டிக்கேட்கவே அம்மா அங்

---

* ஜெகோபைட்ஸ் (Jacobites): ஆங்கிலதேயத்து சிங்காசனம் இழக்க நேரிட்ட இரண்டாம் ஜேம்ஸ்க்கும் அவனது சந்ததியாருக்கும் சேரவேண்டுமெனப் பிடிவாதமான கொள்கைகளைக் கொண்ட ஓர்கூட்டத்தார்.

தப் பாடம் எனக்கு நன்றாய்த் தெரியும். இதோ ஒப்புவிக்கிறேன் பார் என்று இரண்டு தரத்திற்கு மேல்படித்திராவிடினும் ஒரு வார்த்தைகூடப் பிழையின்றி தெளிவாய் சொல்லி முடிக்கவே தாயார் கேட்டு அளவற்ற ஆனந்தமடைந்தனள்" அவனுக்கு மூன்று வயது நிரம்புவதற்கு முன் ஒரு சமயம் 'இலிச்பீல்டு,க்கு பிரசங்கஞ்செய்வதில் கியாதிபெற்றடாக்டர் 'சாசர்வெல்' (Dr. Sachervel) என்பவர் விஜயஞ் செய்தார். அப்போது அவர் செய்யும் உபந்நியாசத்தைக் கேட்க திரளான ஜனங்கள் வந்து கூடினார்கள். தன் தகப்பனார் தோளின் மீது ஏறிக்கொண்டு ஜான்சன் என்னும் பாலகன் அதிவிநயத்தோடும், கவனமாயும், ஆவலாயும் அவ்வுபந்நியாசஞ் செய்வோர் வதனத்தையே உற்று நோக்கிய வண்ணமாக விருந்தனர். இளம்பிராயத்தில் இவர் கண்டமாலை போன்ற ஒரு கடுநோயாற் பீடிக்கப்பட்டு முகமும் கறுத்து ஒரு கண் ஒளியும் மழுங்கியது. தாயார் துயருற்று இந்நோய் தீர சிகிச்சையாதேனுமுளதோ வென விசாரிக்கு மளவில் அக்காலத்து ஜனங்களுக்கு மூடபக்தி விசேஷமாய் இருந்ததால் சிலர் சொற்படி குழவியை அரசன்பால் விடுத்து தொடப்பெற்றால் சௌக்கியமடையுமென்று நம்பி அப்போது இங்கிலாந்து மஹாராணியான ஆன் (Anne) என்பவளிடம் வந்தடைந்தனள். அக்காரிகை தன் கையாற்றடவினும் சிறிதும் பயன்படவில்லை என்றாலும் இதைப்பற்றி பிற்காலத்தில் ஜான்சனை சிலர் கேட்டதற்கு தன்னை சிறுவயதில் கறும்பட்டாடையுடுத்தி வைரப்பூணாரம் பூண்ட ஒரு சீமாட்டி தடவிக்கொடுக்கும் பாக்கியத்தை பெற்றேனென்று புகழ்ந்து கொண்டாடினார். கல்வி பயிலகனமிருகாரிகையால் கற்பிக்கப்பட்டுவரும் கல்லூரியில் காதலோடு வந்தடைந்தனர். ஒருநாள் தன்னைவழக்கமாய் அழைத்துக்கொண்டுபோக வருகிற வேலைக்காரன் பள்ளிக்கூடம் கலைந்த பிறகு வந்ததால் தனிமையாய் வீட்டுக்குப்போக நேரிட்டது. போகும் பாட்டையில் சாக்கடைகளைக் கடந்து செல்லவேண்டியிருந்ததால் குனிந்துகொண்டே ஒற்றைக்கண் பார்வையுடன் தரையைக் கீழ்நோக்கிச் சென்றனர். இதைக் கண்ணுற்ற அவருடைய ஆசிரியர் எதிர்படும் வண்டிகளாலாவது மற்று இன்னும் வேறெவ்விதத்தினாலேயும் இடுக்கண் நேரா வண்ணம் தன் மாணாக்கரைப் பின்பற்றி சென்றனர். இதைக் கடைக்கண்ணுற் கண்டு கடுஞ் சினங்கொண்டு கண் பொட்டை யென்றல்லவோ தன்னைப் பின்றொடர்ந்து வருகிறாரென ஐயுற்று அக்கல்லூரித் தலைவியை கண்ணில் தீபறக்க உற்று நோக்கினர். இதனால் அப்பாலகனது நாணமுடைமையின் சிறப்பும், பிறர் தன்மீது குறைகூறுதலைச் சகியானென்பதும் விளங்கிற்று. ஆங்கிலமைய்யமறக் கற்றுணர "டாம் ப்ரவுன்" (Tom Brown) என்ற ஆசாரியரிடம் சிலகாலமிருந்து இலத்தீன பாஷையைக் கற்க 1719ல் ஒரு கலாசாலைக்குச் சென்றார். இவர் இரண்டாண்டு பயின்ற பிறகு தலைமை உபாத்தியாயரால் உபதேசிக்கப்பட்ட ஒரு உயர்ந்தவகுப்புக்கு மாற்றப்பட்டார். இவர் பிரம்பெடுத்தடிப்பதில் பிரபல பாண்டியத்தை யுடைவரே ஒழிய கற்றுக்கொடுப்பதில் கைதேர்ந்தவரல்லரெனக் குறைகூறினர். என்றாலும் இவரிடமுள்ள பிரீதியால் இலத்தீன் பாஷையை நன்றாய் கற்றுக்கொள்ள விடமுண்டாயிற்றென்றும், தான் இவ்வாறடி படாவிட்டால் தனக்கு அப்பாஷை வந்திராதென்றும் வற்புரித்துக் கூறினர்.

பிள்ளைகளைச் சிறிதளவு அடிப்பதால் குணமுண்டென்ற கொள்கைக் கிசைந்தவர். "அடிமேல் அடி அடித்தால் அம்மியும் நகரும்" என்ற பழமொழி நம்மவருள்ளும் வழங்கி வருவதைக் காண்க. வகுப்பில் மற்றப் பிள்ளைகளோடு பேசினதற்கும் அவர்களுடைய கவனம் பாடத்தில் செலுத்தாமல் தடை செய்ததற்கும் தண்டிக்கப்பட்டதே யொழிய மற்றெவ்விதமாயும் கண்டிக்கப்படவில்லையென ஜான்சன் சொல்லிக்கொள்வது வழக்கம். இயற்கையாய் சோம்பற்குண முடையோராயினும் கீர்த்தி

பெறவேண்டுமென்ற அவாக்கொண்டவர் இவ்வெண்ணம் உதிக்கப்பெற்றமையின் பிற்காலத்தில் பிரபல வித்வானுப் புகழ் பெற இடமுண்டாயிற்று.

கண்ணைக்கெடுத்த தெய்வம் மதியைக் கொடுத்தாற்போல் கண் ஒன்று ஊனமானதின் நிமித்தம் தன் தோழர்களோடு விளையாடுவதற்கில்லாமற் போகவே படிப்பிலேயே காலங் கழிக்கத் தலைப்பட்டார். பண்டையக் கட்டுக்கதைகளைக் கற்றுணர்வானுயினர். இவற்றைத் தன் ஜீவ திசைவரைகற்க பேரவாக்கொண்டனர். ஆதலின் மற்றெவற்றின் மீதும் பற்றற்றவனுய்ச்சித்த சுக்தி வேறு பாடடைந்து யாதேனு மொரு ஜீவனோபாயத்துறையில் இறங்க முடியாமற் போயிற்றேயென துயருற்றனர். அளவற்ற இடுக்கண்கள் உரினும் திணையளவும் கலங்கா நெஞ்சத்தராய் கல்வியைப் பெரிதாக உன்னிப்பயின்றுவந்த வகை வியக்கத்தக்கதே.

"முடிவு மிடையூறு முற்றியாங்கெய்துப் படு பயனும் பார்த்து செயல்."—(குறள்).

பிரதிதினமும் விசித்திர கற்பனைக் கதைகளை (Romances) ஒரு முறை வாசித்து அவற்றை மனதில் பதியும் வண்ணம் செய்ய உன்னிப்பகதற்பொழுதிலேயே கனுக்காண்பவர்போல் தானே வாயில் பிதற்றிக்கொண்டு ஒரு தோழனேடு வெளியே உலாவப்போவதுண்டு. அவருடைய ஞாபக சக்தி யாவரும் கண்டு பிரமிக்கும்படி அவ்வளவு மேற்பட்டதாகவும் தான் கற்ற அல்லது கேட்ட யாவையும் எவ்வமயத்தில் கேட்டபோதிலும் முன்பின் யோசனையின்றி எடுத்துச்சொல்லும் ஏற்ற முடையதாக விருந்தது. இவரைப் பற்றிப் பள்ளிக்கூட தோழர் ஒருவர் பேச நேரிட்டபோது தான் ஒருக்கால் 18 செய்யுட்களை படித்துக் கொண்டு வந்ததைக் கேட்டுக் கொண்டிருந்த ஜான்சன் அவைகளைச் சற்று நேரத்திற்கெல்லாம் முழுமையும் திருப்பிச் சொன்னதாகவும் ஏதோ ஒரு வரிமாத்திரம் சிறிது மாற்றினதாகவும் அவ்வாறு வேறுபாடாய்ச் சொன்னது அதில் உள்ளதைக் காட்டிலும் வெகு அழகாயிருந்த தெனவும் கூறியுளர். படித்த எதுவும் மனதை விட்டகலா திருந்தமையின் அவர் பேரறிவு வளர்ந்தோங்கி வந்தன. இதைப் பள்ளித் தோழர்கள் பார்த்து வியந்து அவர் பால் அன்பும், பக்தியும் பெருகி பணிவிடை செய்யத் தலைப்பட்டார்கள். காலை வேளைகளிற் கலாசாலைக்குச் செல்லுங்கால் இவரை ஒரு பையன் முதுகின்மேற் சுமந்து கொண்டும், விழாதபடி இருபுறத்திலும் இருவர் கைலாகு கொடுத்துக்கொண்டும் இட்டுக்கொண்டு போவார்கள். மூடுபனி காலங்களில் ஒருநாள் பனியின் மீது சறுக்கி விளையாட அவரக்கொண்டு மிதியடியின்றி தன்னை இழுக்கும்படி ஒரு பையனைப்பார்த்து ஏவவே அவனதற்கி சைந்து அவர் இடுப்பைச் சுற்றி பலமான கயிற்றைக் கட்டி தன் முழுபலத்தோடு முக்கி முரண்டி இழுத்து திருப்தி செய்தான். சிறிதுகாலம் மாமன் இல்லத்திலிருந்து கொண்டு 'இலிச்பீல்ட்' பாடசாலையிற் படித்தார். பிறகு தகப்பனுர் இவரை 'ஷராப்ஷயர்' (Shropshire) மாகாணத்தில் உள்ள 'நியூபோர்ட்' (New Port) பாடசாலையில் உதவி உபாத்தியாயராகவும், மாணுக்கராகவும் சேர்த்துக் கொள்ளும்படி தலைமை உபாத்தியாயரை வெகுவாய் இறைஞ்சினராயினும் அவர் அதற்குடன்படாமல் தனக்கு மனமில்லை என்று விடை பகர்ந்தனர், என்றாலும் இவர் ஜான்சன் மாணுக்கராக தன்னிடத்தில் வரப்பிரிய மிருந்ததென சொல்லிக் கொண்டு பிற்காலத்தில் பெருமை பாராட்டிக் கொண்டனர். இப்பள்ளியிற் சேர்க்க முடியாமற்போகவே ஊர்ஸெஸ்டெர்ஷயர் (Worcestershire) மாகாணத்திலுள்ள 'ஸ்டோன் பிரிட்ஜ்' (Stonebridge) என்ற கல்விக்கழகத்திற்கு அனுப்பப்பட்டார். (தொடரும்.)

## TRANSFUSION COLUMN. *

## மொழிபெயர்ப்பு வித்தை.

["If a combined, honest and sustained effort is made to *transfuse* (not merely *translate*) good English ...into Tamil, the effect will be to assist and stimulate the study of both languages."—Dr. G. U. Pope.]

### "THERE IS ONE THING I FEAR."

There is one thing I fear
　Not death, nor sharp disease,
Nor loss of friends I hold most dear,
　Nor pain, nor want—not these.

But the life of which men say:
　"The world has given him bread;
And what gives he to the world as pay
　For the crust on which he fed?"

I would pour out strength, and then
　When I have no strength to give,
No use, no share in the lives of men
　Who toil and fight and live—

Then let the end come fast,
　Whatever my past success;
That I may not cumber the ground at last,
　Nor linger in uselessness.

### "அஞ்சுவதொன்றுளதய்யனே"!

"அண்டருக்காநஞ்சருந்தி அம்பலத்திலாடுசிவன்
தொண்டருக்குத் தொண்டனெனத் தொண்டுசெய்வ
[தெக்காலம்."—பத்திரகிரியார்.

I

அஞ்சுவதொன்றுளதய்யனே யுன்னைத்
தஞ்சமென்றடைந்தேன் தயவுசெய்யப்பனே!
அஞ்சிலேன்†காலற்குமாருயிர்வதைக்குமோர்
[வியாதிக்கு
மெஞ்சியதோழர்தந் தேனுறவொழியினுமஞ்சிடேன்
நஞ்சென வருத்துமோர் நல்குறவஞ்சிடேன் நயமில்
வஞ்சகவாதனையால் வருவேதனைக் கஞ்சிடேன்:
அஞ்சிலேனிவைக் கெலாமாருயிர்த் தோழகின்
செஞ்சடைகிறைச் சென்னி மீதுறைவெண்ணிலா
[வறியவே.

II

அஞ்சுவதொன்றுள தென்னெனிலையனே,
பஞ்சுபோற்பறக்கும்பான்மையதாமிப்பிரபஞ்சந்தானும்
"கஞ்சிவார்த்திவனைக்காத்ததற்கிவன் செய்பிரதியே
[தென்ன"
கிஞ்சித்துமோராதஞ்சிடச்செய்யும்அம்பெனவுள்ளத்து
நஞ்சுபோற்பாயும்நயமில் வார்த்தைக்கஞ்சினேனையே!
*கிஞ்சுகமேந்தியகையுடையம்பிகைகாதலனேயுன்றன்
நெஞ்சிலேதங்கியநஞ்சூருக்கெடா அஞ்சியதேவரை
யஞ்சிடேலென்றதன் சக்தியறக்கெடவுண்டனையே!

III

உண்டுமேநஞ்சதை உலகெலாங்காத்தனை
கண்டுமேதேவர்கள் கரங்கூப்பித்தொழுதனர்
உண்டதோர்நஞ்சுமே உன்னுளேசெல்லாது
கண்டத்திற்றுன்கிற்கச் செய்தனள்காதலி!
அண்டத்தைக்காத்தநீ பிண்டத்தை வதைக்காதுன்
கண்டத்தில்கிறுத்தியே காத்தனள் பிண்டத்தை—யப்
பிண்டத்தைக்காத்தவுன் பேரருட்சக்திக்கிப்
பிண்டத்தைகாத்தருள் செய்வது பெரிதாமோ!

IV

பெரிதிலையாதலால் சிறிதுமேயெண்ணுது
எரிதீயிற்பெய்யுமோர் ஆகுதியேபோல
அரிதினிற்பெற்ற விப்பிண்டத்தின் சக்தியை
† எரிதீயின்சக்தியால் இசையக்கொடுப்பனுன்:
எரிதீயின்சக்தி 'சுவாஹை'போல் துரியப்
பரியேறிகின்றுநான் பாருக்குழைப்பேன்காண்:
பெரிதிலசிறிதிலையுடலில யுயிரிலசொல்லற்கோ
வரிதரிதென்தாயே!யுன் ஞர்வகிறை சக்திசெயல்!

V

‡ உழைப்பான் "நீ"யுழைத்தாலுலகெல்லாமுய்யுமே
பிழைப்பான் "நான்"பிழைத்தாலுலகெல்லாம் பிழை
[யாதோ!
உழைப்பானும் பிழைப்பானு முழைத்துப் பிழைக்
[கவென்
றுழைப்பொடு பிழைப்பை யுலகினிற்படைத்தைநீ!
உழைப்பொடு பிழைப்பும் பிழைப்பொடுழைப்பும்
[பேதமில் தழைக்கத்
தழைத்திடு முலகம் தருமமுஞ் செழிக்குமேயாதலால்,
உழைப்பானுழைக்கவுடனுழைக்குமுலகேயால்
பிழைப்பான் உழைக்கவுழைப்பேன் § பேரருளே
[கதியாமால்.

ஓய்தத்ஸத். C. V. S.

---

* "No exercise of faculty is better and nobler for a *real man* than that of struggling with great thought and labouring to express them in such a way that they shall reach the heart, instruct the mind, stimulate the best feelings, and elevate the whole being of their fellow men around them!"—Rev. Dr. G. U. Pope on the *Vivekachintamoni Series*.

† காலன்=எமன், மரணம்.

* 'கிஞ்சுகம்'—கிளி'யேந்தியகை,-அபயஸ்தமாம்.

† எரிதீயின் சக்தி "ஸ்வாஹா"

‡ "நானெனை நீயெனத் தத்துவமிரண்டே" யென்னும் திருமந்திரத்தைக்கவனித்து, ஜீவேசுவர ஐக்கியத்தின் மர்மத்தை யுணர்க, "நீ" பதி, "நான்" சீவன், சீவனுக்கந்நியமாய் உலகில்லையால், "உலகெல்லாம் பிழைக்காதோ" வென்றுர்.

§ 'உழைக்க வுழைப்பேன்'—work for work's sake. கிஷ்காமிய கர்மத்தைச் சுட்டிகின்றது.

## LESSONS IN NATURE STUDY.

### BEES AND BEEHIVES

### பிரகிருதி வித்யாம்சம்.

### தேனீக்களும் தேனும்

---

(மார்கழிமீ சஞ்சிகையின் 280-ம் பக்கத் தொடர்ச்சி.)

### தேன் கூடு.

காற்றுவாட்டமில்லாமல் வெயிலடிக்கப்பட்ட ஓரிடத்தில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் சபைகூடி அதிகநேரம் பேசிக்கொண்டேயி ருந்தால், அவர்களுடைய தேகத்தில் புழுக்க மிகுத்து வியர்வை வெளிப்படுவது சகஜந் தானே! அதிலும் சபையோர்களெல்லாம் லாகிரி பதார்த்தங்களையுண்டு தலைகால் தெரியாதவர்களாய் ஒருவர்மேலொருவர் விழுந்து கிடந்தால், அவர்களுடைய தேகத்திலிருந்து வியர்வை ஜலம் மழைபோல் பொழியாமலிருக்குமோ? அப்படியே தேனீக்களும் தங்கள் தேகத்திற்கு விசேஷ அனலைக் கொடுக்கக் கூடிய மதுவையுண்டு, குடியர்களைப்போல் ஒன்றின்மேலொன்றாயும், பத்தாயிரக்கணக்காயும் உட்கார்ந்திருந்தால், சூடுண்டாகி அவைகளின் தேகத்திலிருந்து பாளம்பாளமாகவும் தகடுதகடாகவும் மெழுகு வெளிக்கிளம்புகிறது. அங்ஙனம் வெளிப்பட்டுக் கொண்டிருக்கும் மெழுகை சிறசில ஈக்கள் எடுத்துக் கொண்டுபோய் கண்டுபிடிக்கப்பட்ட நூதனவிடத்தில் கூடுகட்டத் தொடங்கும்.

"வான்குருவியின் கூடு வல்லரக்குத்தோல் கறை [யான்,
தேன்சிலம்பி யாவருக்குஞ் செய்யரிதால்—யாம் பெரி [தும்.
வல்லோமே என்று வலிமைசொல் வேண்டாங்காண்,
எல்லோர்க்கு மொவ்வொன்றெளிது."

என்றபடி, மற்றவர்களுக்குத் தேன்கூடு கட்டுவது கஷ்டமானதேயன்றி, ஈக்களுக்கு மிகவும் எளிதானதே. எப்படியென்றால்:— பிடித்தால் பிள்ளையாரென்பதுபோல, சர்வாதிகாரியான இராணி ஈயானது, அஸ்திவாரக்கல் நாட்டுவதுபோல, ஓரிடத்திலுட்கார்ந்து தன்னுடலின்பேரிலுள்ள மெழுகை வைத்து இரண்டு மூன்று தடவையசைந்து, வெளியேவந்து உட்சென்று, மறுபடியும் முன்னும் பின்னுமாக அசையவே, ஒரு அறையுண்டாகும். இதுவே அரசமாளிகை இதற்கு சமீபத்தில் கிழதிகாரிகளான சில ஈக்களும் அவ்விதமேயுட்கார்ந்து தங்கள் அறைகளையும் செய்ய, மற்ற ஈக்களும் அவற்றையடுத்து உட்காரந்து வரிசைக்கிரமமாக வீடுகளைச் செய்துக்கொண்டேவரும். இப்படி ஒருபுறத்தில் சில ஈக்கள் அறைகளையமைக்க வேறு சில ஈக்கள் மறுபுறத்தில் அறைகளைச் செய்து கூண்டை முடிவுசெய்யும். ஈக்கள் ஆறுகால் பிராணிகளானதால், தம்மறைகளையும் அறுகோணமாய் அமைக்கிறதென்று எண்ணவும் கூடும். வட்டமாகவே அறைகளைச் செய்கிறதென்று வைத்துக்கொண்டாலும், அவைகள் இரண்டு வரிசையான ஆறு கால்களையும், இரண்டு இறகுகளையும் மடக்கிக் கொண்டு தங்கள் அறைகளுக்குள் செல்லுகிற படியால், கால்களினால் இரண்டு மடிப்புகளும் இறகுகளினால் நான்கு மடிப்புகளுமுண்டாய், அறைகள் சம அளவுள்ள அறுகோணவீடுகளாய் அமைகின்றனவென்று கூறத்தகும். இப்படி ஒவ்வொரு ஈயும் தன் தேகத்திலுண்டான மெழுகை ஒன்றுக்கு சமீபத்திலொன்றாய் வைப்பதால், ஒவ்வொரு அறைக்குமுள்ள ஆறு சுவர்களும் இரட்டை சுவர்களாய் ஏற்பட்டுவிடுகின்றன. இது முடிந்தபிறகு கூண்டின் பொது வேலைகளாகிய, சுற்றுச்சுவர் போடுதல், தப்பித்தவறியிருக்கும் இடுக்குகளையும் துவாரங்களையும் சரிபடுத்தல், கரடுமுறடுகளைத் சமன்படுத்தல் முதலிய வேலைகளை சில ஈக்கள் மேற்கொண்டு தங்கள் கால்களையே, மெழுகுத்தகடுகளை எடுக்கும் இடுக்கியாகவும், நாவையே கரணையாகவும், உமிழ்நீரையே சாந்தாகவும் உபயோகப்படுத்தி வேலையை முடிக்கும்.

தேனீக்கள் தங்கள் சங்கைக்கும் சக்திக்கும் தக்கின அளவாய் கூட்டைக்கட்டத்தொ

டங்கி 24-மணி நேரத்திற்குள் முடிக்கின்றன வேயன்றி, நம்மவரைப்போல் கையிலுள்ள பணத்தையெல்லாம் அஸ்திவாரத்திற்கும் கட்டடத்திற்குமாகச் செலவிட்டு, கூரைபோடக் கையிற் தொகையில்லாமற் கடன் பட்டு, அதையொருவாறு ஒப்பேற்றி, சாந்துபூசி வெள்ளையடிக்கக் கையில் பொருளில்லாதவர்களாய், வருஷக்கணக்காய் வீட்டை யப்படியே வைத்துக்கொண்டு, தங்களுக்கனுகூலமாய் கன்னடபாஷையில் "மனேகட்டி நோடு, மதுவே மாடிநோடு" என்ற பழமொழி ஏற்பட்டிருப்பதை நினைத்து திருப்தியடைவது போல தேனீக்கள் இருப்பதில்லை. ஒரு கூட்டத்தை சேர்ந்த ஈக்களெல்லாம் வீடுகட்டுகிற வேலையிலேயே இருந்தால் எப்படி சாத்தியம்? ஆகாரம வேண்டுமே? அக்காலத்தில் சில ஈக்கள் பிரவேசித்து செய்துக்கொண்டே யிருக்கும். சிற்சில ஈக்கள் எட்டு, பத்து மைல் தூரஞ்சென்று தேனை எடுத்துக்கொண்டு வந்து சேர்க்கும்.

நீலகிரி மலையில் கட்டை என்று ஒருவித மான செடியுண்டு. இது பன்னிரண்டு வருஷத்திற்கொருமுறைதான் புஷ்பிக்கிறதென்று கூறுகிறார்கள். அதிலும் தொதவனாட்டிலுள்ள செடிகள் புஷ்பித்து ஆறுவருஷமான பிறகுதான் பறங்கிநாட்டிலுள்ள செடிகள் புஷ்பிக்குமென்றும், பறங்கினாட்டிலுள்ள செடிகள் புஷ்பித்து ஆறுவருஷமான பிறகுதான் மறுபடியும் தொதவனாட்டில் புஷ்பிக்குமென்றும் கூறுகிறார்கள். யாம் பரீக்ஷித்த வரையில் அது உண்மையென்றே நம்பவேண்டியிருக்கிறது. இந்தச் செடிகளில் மலரும் புஷ்பங்களும் அதிகம், புஷ்பங்களில் தேனும் அதிகம். புஷ்பங்களைப்போலவே மதேனின் நிறமும் இரத்தச் சிவப்பாயிருக்கும். ஒரு சமயத்தில் பறங்கினாட்டிலுள்ள ஓரிடத்தில் எடுக்கப்பட்ட தேன், கட்டை புஷ்பத்தினின்று எடுத்து சேகரிக்கப் பட்டதேனாக விருந்தது. பறங்கினாட்டில் அப்பொழுது அப்புஷ்பமே கிடையாது. அப்படியிருக்க ஈக்கள் தொதவனாட்டிலிருந்தே அத்தேனைக் கொண்டுவந்து சேகரித்திருக்க வேண்டுமென்று நம்பப்போதுமான காரணங்களிருந்தன. இதனால், ஈக்கள் பத்துமைல் தூரத்திற்கப்பால் சென்றும் தேனைத்தேடிக்கொண்டு வருகிறதென்று விளங்கிற்று.

## ஈக்கள்.

ஒவ்வொரு கூண்டிலும் இராஜமாளிகை என்று ஒரு வட்டமான பெரிய அறையும் அதையடுத்து கீழதிகாரிகள் வசிக்கும் வேறு சில வட்டமான அறைகளுமுண்டென்று முந்தியே கூறியிருக்கிறோம். இராஜமாளிகையில் வசிக்கும் இராணி ஈயும், கீழதிகாரிகளான வேறுசில ஈக்களும் உருவத்தில் மற்ற ஈக்களைவிடப் பெரியது. இவைகள் மற்ற ஈக்களைப்போல ஓடியாடித்திரிந்து பாடுபடுகிறதில்லை. மற்ற தேனீக்கள் பாடுபட்டு சேர்க்கிற தேனை இவைகள் குடித்து யாதொரு வேலையும் செய்யாமலிருக்கிறபடியால், உடல் பருத்து பறக்கச் சக்தியற்றவைகளாய் கூண்டையே காத்துக்கொண்டிருக்கின்றன. இவ்வீக்களே முட்டையிட்டு குடும்ப விருத்தி செய்கின்றனவென்று எண்ணப்படுகிறது. அம்முட்டைகள் சீக்கிரத்தில் வெண்புழுக்களாய்மாறி, பிறகு இறகுமுளைத்து ஈக்களாக வெளிப்படுகின்றன. இராணி ஈயும் அதிகாரி ஈக்களுமிருக்கிறவரையில் மற்ற ஈக்கள் பிரிந்து போவதில்லை. எக்காரணத்தினாலாவது இவ்வீக்கள் இறந்துபோய்விட்டால், மற்ற ஈக்களும் பிரிந்துபோய்விடும். அரசனில்லாத ஊர் பாழ் என்பது பொய்யன்றே. சிற்சில கூண்டுகளில் இராணி ஈக்கள் இரண்டு வருஷத்திற்கதிகமான காலமுயிருடனிருந்ததாகவும் தெரியவருகிறது. இத்தேனீக்களையும் வியாதிகள் சில சமயங்களில் வருத்துகின்றன. மனிதர்களால் அமைக்கப்படுகிற விடங்களில் வந்து சேர்ந்து, கூடுகெட்டிக்கொண்டிருக்கின்ற ஈக்

களில் அநேகம் திடீரென்று இறந்துவிடுகின்றன. இப்படி இறந்துபோவது அநேகமாய் ஒருவிதமான ஊதல் காற்றடிக்கும் சமயமே என்று எண்ணப்படுகிறது.

சாதாரணமாய் தேன் சேகரிக்கிறவர்கள் அங்கங்கே வனங்களிலும் குன்றுகளிலும் காணப்படுகிற தேன் கூடுகளைக் கலைத்து தேன் எடுக்கிறார்களே தவிர, தேனீக்களை வளர்த்தி வாலிபம் பண்ணித் தேன் எடுப்பதுண்டென்று கேட்டிருக்கமாட்டார்கள். ஐரோப்பாவிலுள்ள சில தேசங்களில் தேனீக்கள் கூடு கட்டத்தகுந்த வசதியான இடங்களை அவ்விடத்திலுள்ளவர்கள் அமைப்பதாகவும், அதில் தேனீக்கள் தங்கள் கூடுகளைக் கட்டுவதாகவும் அவைகளிலிருந்து தேனையவர்கள் வேண்டியபொழுது எடுத்துக்கொள்வதாகவும் அறிகிறோம். அப்படியே நீலகிரி மலையின்பேரில் ஐரோப்பிய தோட்டக்காரர்களில் பலரும் மற்றவர்களில் சிலரும் செய்துவருவதை யாம் நேரில் பார்த்து வருகிறோம். இவர்கள் தேனீக்கள் வந்து கூடுகட்டுவதற்கு வசதியான தகுந்தவிடத்தில் ஒரு சிறிய குடிசைசெய்து, அதில் பெரிதான இரண்டு மூன்று பானைகளுக்கு ஈக்கள் நுழையும்படியான சிறிய வாரங்களைச்செய்து, ஒரு பலகையின்பேரில் கவிழ்த்து வைக்கிறார்கள். இப்பானைகளுக்கு வாசனையுண்டாக்கும் படியாக கொஞ்சம் வெண்ணெய் பூசிவைப்பதுண்டாம். சிறிது நாளைக்குள் ஈக்கள் இந்த சுகமான விடத்தைக்கண்டு பானைகளிலுள்ள துவாரங்களின் வழியாக உட்சென்று கூடுகள் கட்டத் தொடங்கிவிடுகின்றன. அமாவாசைக்கு நான்கு நாள் முந்தியே, பானையொன்றுக்கு ஒன்று இரண்டு கூடுகளை விட்டுவிட்டு மற்றவைகளை எடுத்துக் கொள்ளுகிறார்கள். அவற்றிலும் எந்தக் கூண்டுகளிலும் தேன் அதிகமாயிருக்கிறதோ அவைகளை எடுத்துக்கொள்ளுகிறார்கள். முட்டைகளும் குஞ்சுகளும் அதிகமாயிருக்கப்பட்ட கூடுகளை எடுத்துவிட்டால் ஈக்கள் வேறு இடத்திற்குப் போய்விடுமென்று கருதப்படுகிறது. அமாவாசைக்குப் பிந்தி எடுத்தால் கூடுகளில் தேன் அதிகமாயிருப்பதில்லையாம். சூரிய அஸ்தமானத்திற்குப் பிறகு கூடுகளை எடுப்பதானால், ஈக்கள் அவ்வளவாகக் கொட்டுவதில்லையாம். இப்படி மனிதர்களுடைய இஷ்டப்படி கூடுகட்டுகிற தேனீக்கள் நாட்டுத்தேனீயில் கொம்புத்தேனீ என்ற ஜாதியே அதிகம். இப்படி தேனைக்கூடுகளிலிருந்து எடுப்பவர்கள் சிலர் கூடுகளை அழுத்திப் பிழிந்துகொள்ளுவார்கள். மற்றும் சிலர் கூடுகளை முறித்து ஒருபாத்திரத்தில்போட்டு கொஞ்சம் காச்சுவார்கள். தேன் உருகின உடனே வடிக்கட்டு எடுத்துக்கொள்ளுவார்கள். காய்ச்சி எடுக்கப்பட்ட தேன் வெண்மையாகக் காணப்படுகிறது. ஆனால் சீக்கிரத்தில் கற்கண்டாய் விடுகிறது. காய்ச்சின தேனிலிருந்து எடுக்கப்பட்ட மெழுகு அதிக கடினமானதாய் விடுகிறது. கூண்டிலுள்ள முட்டைகளையும் ஈக்களையும் அழுத்திக்கொன்று விடாமல் தேனைமட்டும் எடுத்து வைத்தால் வெகுகாலம் கெட்டுப்போகாமலிருக்கும் இவ்விதத் தேனில் ஒரு சொட்டெடுத்து ஒரு காகிதத்தின்பேரில் வைத்து ஊதினால் அது உருண்டோடும். அதுவே சிரேஷ்டமான தேன். (முற்றிற்று)

---

## "LIFTINGS" விஷயத்திருட்டு.

பத்திரிகைகள் விஷயத்திருட்டுச் செய்வது மானக்கேடு. பணம் மிகுந்தவர்களும் பேர் பெற்றவர்களும் கூட இந்த அவமானத்துக்கு ஆளாவது ஈனமாக நினைக்கிறார்கள். தமிழில், பிழைக்கத் தெரியாதவர்களெல்லாம் பத்திரிகை போடத்துவக்கி விஷயத்திருட்டுக் கஞ்சாது துஞ்சிப்பிழைக்கிறார்கள். அந்தத் திருட்டுச்சொத்தையும் வீரம் பாராட்டி வாங்குகிறவர்கள் இருக்கிறார்கள். இவர்கள அந்தஸ்தும் பாராட்டுகிறார்கள். இஃதெல்லாம் காலக்கொடுமை.

## VALUABLE MAXIMS FOR EVERY-DAY

## நித்தியப்படி நினைத்துச் சாதிக்கத்தக்க சிறந்த நீதிகள்.

இந்நீதிகள் இங்கிலீஷில் அப்பாஷைக்குரிய இருபத்தாறு அக்ஷரங்களின் கிரமப்படி கோர்க்கப்பட்டவை. இவை பாரன் ராத்ஸ்சைல்ட் (Baron Rothschild) என்னும் செல்வப்பிரபுவால் தெரிந்து சேர்க்கப்பட்டவை என்பர். இவை உண்மையாகவே உயர்ந்த நீதிகளை அடக்கிக்கொண்டிருக்கலின் இவற்றை தமிழ் மூதுரைகள் சேர்த்து அடியில் தமிழெழுத்து முறைப்படி நித்தியக்கடனைப் நினைத்து நன்மதியொன்றில் சாதிக்க நாளைக் கொன்றாய் நவில்கிறோம் தமிழில்.

1. அடையவெண்ணி முடியத்துணிக.
2. ஆ! அற்பத்தொழிலிலும் சட்டைசெய்யற்க.
3. இடையூறெல்லாம் உடைதரப்பெறுக.
4. ஈடில்லை கண்டுணர் ஈசைக்குணத்திற்கு.
5. ஊக்கம் கைவிட்டாக்சமிழவேல்.
6. எல்லார் பாலும் இன்மொழிகூறுக
7. எனைத்தினைப்பெறினும்தினைத்துணைப்பொய்யேல்
8. ஏற்பதிகழ்ச்சியால் எனைத்துணையானும் ஊக்கமது கைவிடேல்.
9. ஒழிந்தசமயத்துற்றதுசெய்வகையறிந்துசெய்.
10. ஓதுவதொழியேல் கோதுவரும் மற்றெதிலும்.
11. கசடுறு சிந்தையைக் கருதாதொழிக்கவே,
12. சடனைவாங்கஉடன்பசேடலென்றும்! வாங்கின [கடனை உடனேதீர்க்குக.
13. காமாதிகளைக் காத்தடக்குகவே கருத்துடனென் [றும்.
14. தக்கனஎண்ணித் துணிந்துசெய்கர்மம்: தகாதன [செய்யக்கருதலும் கேடே.
15. தாயைப் பேணித் தந்தையைவணங்கிப் புத்தியை [வளர்க்க.
16. திரிகரணசுத்தியைத் திரிகாலத்தும் ஒறுவாதுறுக.
17. தீயோரினத்தைச் சேராதொழிக.
18. துயர்வந்துறுதொறும் தூயசித்தத்தால்ஆய்ந்ததைப் [பெறுக்க ஆக்கம்பெருகும்.
19. துறக்கினும்சைப்பொருள் துறவேல்சொள்கையை
20. நட்பினலம்நாடி நன்டனை ஒறுக்சேல்.
21. நல்லாருறவை நனவிலும் கனவிலும் பற்றியொழு [கிற்பதம்பெறலாமே.
22. நன்னடக்கையினில் மன்னி ஒழுகுக.
23. நெறியல்லாதன மருவுதலொழிக.
24. நெறியாமதனைக் குறியாச்செய்க.
25. பல்லோர்நேசம் பொல்லாங்காமே.
26. மதுவர்க்கங்களை மனதினும் கினையேல்.
27. மற்றவர் பெயரை வசையாற்கெடற்க.
28. மேற்கொள் வினையை விரைவில் முடிக்க.
29. வெளி வேடத்தை விடுக்குக முற்றும். [தவறேல்.
30. வேளைதப்பாமல் வினையைத்தொட்டு முடிக்கத்

## HEALTH STORY:

### SESHU AND HIS MOTHER (ON THE EVILS OF OVEREATING.)

## சேஷுவும் அவன் தாயாரும்

சுகாதாரத்தைப்பற்றிய ஒரு சிறுகதை

மீதூண் கேடு.

திப்பிராஜபுரத்தில் சேஷு என்று ஒரு பையன் இருந்தான். அவனுக்கு பன்னிரண்டு வயதாகிறவரையில் அவனைப் பள்ளிக்கூடத்தில் போடவில்லை. அவன் பாலியத்தில் வெகுவிஷமக்காரன். அந்த ஊரில் அவன் ஏறாத மரம் கிடையாது. அவன் நீஞ்சாத குளம் கிடையாது. ஆனால் அவன் பிறருக்குத் தீங்குசெய்கிறதில்லை. அவன் தாயார் பாலியத்திலே புருஷனை இழந்துவிட்டபடியால் தன் ஒரேபிள்ளையாகிய சேஷுவே கதியென்று அவனை வெகு அக்கறையுடன் வளர்த்துவந்தாள். ஆனால் அவளுக்குத்தெரிந்தவரையில் அவள் அக்கறையெடுத்துக்கொள்ளக்கூடியவிஷயம் அவன்சாப்பாட்டு விஷயம்தான். அவனுக்கு வயிறுநிரம்ப அவள் ஒவ்வொருவேளையும் சாப்பாடு போடுவதுவழக்கம். அவன் திருப்தியாய்ச் சாப்பிட்டுவிட்டு விளையாடப்போய்விடுவான்.

இந்த ஏற்பாடு அவன் விளையாட்டுக்காலம் வரையில் சரியாக இருந்தது. பிறகு சேஷுவின் தாயாருக்கு சுமார் முப்பதுவயதான போது தன்பிள்ளை ஒரு படிப்புமில்லாமல் திரிகிறானே, தனக்குப்பிறகு என்னமாய்க் காலக்ஷேபம் செய்வான்; தனக்கு உள்ளசொத்துகொஞ்சம்தானே! என்று விசாரம் உண்டாயிற்று. அப்பொழுது தன்பிள்ளையைவிட்டுப் பிரிந்து இருக்க மனமில்லாதவளாய், ஒருசிறிய பள்ளிக்கூடமுள்ள அடுத்த ஊருக்கு சேஷுவை அனுப்பினாள். அங்கே சேஷு இரண்டுவருஷங்களில் நான்குவருஷப்படிப்பை முடித்தான். பிறகு நாகப்பட்டணத்துக்கு மேற்படிப்புக்காகப் போக வேண்டியதாக விருந்தது. அங்கேயே எட்டுவருஷங்களிருந்து 'மெட்ரிகுலேஷன்' 'எப். ஏ.' பரீக்ஷைகளில் தேறினான். இதற்குமேல் இவனைப் படிக்கவைக்க இவன்

சொத்து இடங்கொடுக்கவில்லை. ஆகையால் அங்கே 'கலெக்டர் ஆபீஸில்' ஒருவேலை பார்த்துக்கொண்டு தான் பல வருஷங்களாகப் பார்க்கவே இல்லாத தன்பிரியமுள்ள தாயாரை அழைத்துவரத் திப்பிராஜபுரத்துக்குச் சென்றான். அங்கே இவனைக்கண்டவுடன் இவன் தாயார் "என்ன அப்பா இப்படி இளைத்துப் போய்விட்டாயே" என்று வெகு விசனத்துடன் கேட்டாள்.

சேஷு, 'இல்லை அம்மா,' இளைக்கவேயில்லை: சௌக்கியமாக இருக்கிறேன்' என்றான்.

அம்மா, "சௌக்கியமாவது,கிவுக்கியமாவது; விலாஎலும்பெல்லாம் தெரிகிறது. கோற்காலியாட்டமா இருக்காயே. வயிறுநிரம்பச் சாப்பிடுகிறதில்லையோ ?" என்று கேட்டுவிட்டு உடனே தனக்குள் தன்னைப்போலக் கட்டாயப்படுத்தி 'இந்தப் பிடியைமட்டும் சாப்பிடு, இந்தப் பிடியை முட்டும் சாப்பிடு' என்று போடாமல் த்தான் பிள்ளை இந்தமாதிரி இளைத்துப் போய் விட்டான் என்று நிதானித்துக்கொண்டு தான் இனியாவது ஜாக்கிரதையாக இருக்கவேணுமென்று நிச்சயித்தாள்.

சேஷு ஸ்நானம்செய்துவிட்டு சாப்பிடவந்தான். அம்மாள் பரிமாறினாள். பருப்பும்சாதமும் சாப்பிட்டாய்விட்டது. இரஸமும் சாதமும் சாப்பிட்டாய்விட்டது. சேஷுவுக்கு வயிறு நிறைந்துவிட்டது அதாவது அவனுக்குத்திருப்தியாகிவிட்டது. அவன்தாயாருக்குத் திருப்தியாகவில்லை. 'இல்லையடா இதுமட்டும் போட்டுக்கோ' என்று சிப்பத்தட்டில் நிரம்ப சாதத்தை வைத்துக்கொண்டு வருத்துகிறாள். இவன் 'என்ன அம்மா கஷ்டப்படுத்துகிறாயே' என்கிறான். அம்மாளுக்குக் கோபம்வந்துவிட்டது.

'என்ன நாம்பதான்படிச்சு 'பாஸ்' பண்ணிவிட்டோம் என்று தலைகிழே நிற்கிறாயோ. வயிறு நிரம்பசாப்பிடாவிட்டால் என்னத்துக்கு ஆகும் உடம்பு?' என்றாள்.

சேஷு, 'அம்மா, எனக்கு முட்டமுட்டச் சாப்பிட்டால் அப்புறம் என்னவோ போலிருக்கிறது. ஒன்றும் ஓடுகிறதில்லை. அப்படிச்சாப்பிடுகிறது நல்லதில்லை என்று நான் வாசித்திருக்கிறேன்'! என்றான்.

அம்மாள் வருத்தத்துடனும் கோபத்துடனும், 'உன் புஸ்தகத்தை அடுப்பிலேபோடு, அதாருடாசொன்னு? வயிறுநிரம்பச் சாப்பிடாமல்தான் இப்படி நாயாட்டமா இருக்கே. சீ! சாப்பிடு' என்று அந்தசிப்பத்தட்டுச் சாதத்தையும் இலையில் போட்டுவிட்டாள். சேஷுவுக்கு வருத்தமாக இருந்தது. 'இதென்ன இந்த சாதாரணசங்கதி இவர்களுக்குத் தெரியவில்லையே. ஆனால் தெரியக்கூடியதில்லை. நாம் சொல்வோம்' என்று யோசித்துக்கொண்டான்.

'அம்மா, இப்படிச்சாதத்தைக் கொட்டிவிட்டாயே,நான் ஒருசங்கதிசொல்லுகிறேன் கேள். ஒரு மிராசுதாரனுக்கு 10 குடியானவர்கள் இருக்கிறார்கள். அவனுக்கு வயல்வெட்டுக்கு 7 ஆள்வேண்டியிருக்கிறது ; தண்ணீர்பாய்ச்ச 8 ஆள்வேண்டியிருக்கிறது ; என்றால், அவன் ஒரே சமயத்தில் இரண்டு வேலைகளையும் முழுமையும செய்யமுடியுமா. ஒருவேலைக்கு 7 ஆள் விட்டால் மற்றவேலைக்கு 3 ஆள்தான் இருப்பார்கள். 6 ஆள் ஒரு இடத்துக்கு விட்டால் மிகுதி 4 ஆள் தான் இருப்பார்கள். ஆகையால் அவன் இரண்டுவேலைகளையும் ஒரேசமயத்தில் இந்த 10 ஆள்களை வைத்துக்கொண்டு முடிக்க முடியாது.

காலையிலிருந்து 10 மணி வரையில் தண்ணீர் இரைக்க 8 ஆட்களை விட்டுவிட்டுப் பிறகு அவர்கள் திரும்பிவந்த உடன் வயல்வெட்டுக்கு வேண்டிய ஆட்களை அனுப்பவேண்டும். மிகுதி ஆட்கள் இன்னும் எவ்வளவோ ஸாதகமான வேலைகள் செய்ய ஏவப்படலாம். இதுபோல, நம்தேகத்தில் எந்தக்காரியத்திற்கும் நம்முடைய இரத்தத்தின் உதவிவேண்டியிருக்கிறது. நடந்தால் கால்களுக்கு மற்ற இடங்களைக்காட்டிலும் சற்றுஜாஸ்தி இரத்தம் வேணும். வேஷ்டிதோய்த்தால் கைகளுக்கு மற்ற இடங்களைக்காட்டிலும் ஜாஸ்தி இரத்தம்வேணும்.

அப்படியே, நாம் சாப்பிட்ட பிறகு ஜீர்ணம் ஆகிறவரையில் வயிற்றுக்குள் ஜாஸ்தி இரத்தம் வேண்டியிருக்கிறது.

படிக்கும்போது மூளையில் ஜாஸ்தி இரத்தம் வேண்டியிருக்கிறது. சாப்பிடுகிறதும் படிக்கிறதும் ஒரேசமயத்தில் நம்தேகத்தில் சாதாரணமாக உள்ள இரத்தத்தின் உதவியினால் செய்யமுடியாது. அப்படிச் செய்கிறது பிசகு. ஒருமனிதன் வயிறுமுட்ட சாப்பிட்டு விட்டு உடனே படிக்க உட்காருவானானால் அவனுக்குத்தூக்கம் வந்துவிடும். வயிறுமுட்டச் சாப்பிட்டு விட்டு ஏதாவதுயோசனைவேண்டிய வேலையை ஒருவன் வழக்கமாகச்செய்து கொண்டு வருவானானால் அவன் சிறிதுநாட்களில் தேகத்தில் இரத்தக்குறைவினால் கஷ்டப்படுவான். உடம்பு வெளுத்துப்போகும். பலம்குறையும். அடிக்கடி மயக்கம்வரும். மறதி உண்டாகும். இவைகளுக்குக் காரணம் நம் தேகத்தில் உள்ள இரத்தம் ஒரு அளவுக்குள்பட்டிருக்கிறதே. இருக்கிற இந்த இரத்தத்தைப் பல விஷயங்களுக்கு ஒரேசமயத்தில் உபயோகிக்கமுடியாது. மிதமிஞ்சிச் சாப்பிட்டால் வெகுநேரத்துக்குப் படிக்காமலிருக்கவேணும். அளவாய்ச்சாப்பிட்டால் சாப்பிட்டுச் சற்றுநேரத்திற்கெல்லாம் படிக்கவோ, வேறு வேலைசெய்யவோ துவக்கலாம். தூக்கம் வராது. தூக்கம் வருகிறதற்கு ஒருகாரணம் மூளையில் இரத்தம்குறைவுபடுகிறதுதான். நான் இப்போது வேலையில் அமர்ந்திருக்கிறதுடன்கூட இப்படியிருந்துகொண்டே, பி. ஏ. பரீக்ஷையும் கொடுக்கவேணுமென்று உத்தேசிக்கிறேன். இப்படிச் சாப்பாடு போட்டாயானால் நாலுநாளில் தூங்குமூஞ்சியாகிவிடுவேன். அதிகச்சாப்பாடு மிகவும் கெடுதல் உண்டுபண்ணும். மிதமாகவும் பலதடவைகளிலும் சாப்பாடு செய்யவேணும். சுளுவாக ஜீர்ணமாகக்கூடிய சாப்பாடு சாப்பிடவேணும். இன்னொரு சங்கதி'.—

அவன் முடிக்கிறதக்குள் அம்மாள் 'சரிதான், நீ சொன்னதெல்லாம் சரி, இனிமேல் நான் உன்னைக் கட்டாயப்படுத்துகிறதில்லை; ஆனால் தனக்கு வேண்டியதைத்தான் எங்கே எல்லாரும் சாப்பிடுகிறார்கள்? சாதத்தைக் கிட்டக் கொண்டுபோகிறதற்குள்ளே தான் "போதும், போதும், போதும்," என்று இலைமேலே குப்புற விழுகிறார்களே. இப்படிப் பூகஞ்சிபண்ணினால் கட்டாயப் படுத்தித்தான் சாதம்போட வேண்டியதாக இருக்கிறது. கடக்கட்டும், இலையில் சாதம் விரைவிரையாகப் போய்விட்டது; மோர்விட்டுக்கலந்து சாப்பிடு' என்று சொன்னாள்.

சேஷு—,'சாப்பிடுகிறேன். இத்தனை நாழிகை பேசிக்கொண்டிருந்ததில் சற்று வயிறுகுறைந்ததுபோல் இருக்கிறது. ஆனாலும் இவ்வளவு சாதம்சாப்பிடுகிறதுநல்லதில்லை. இருக்கட்டும், வெள்ளைக்காரர்களுக்குள் இப்படிப் பரிமாறுகிறதில்லையே. சமையலான பதார்த்தங்களை வரிசையாகச் சாப்பிடுகிறவர்கள்முன் கொண்டுவந்து வேலைக்காரர்கள் வைத்து விடுகிறார்கள். இவர்கள் தங்களுக்கு வேண்டிய பதார்த்தங்களில் வேண்டிய அளவுமட்டும் எடுத்துக்கொண்டு சாப்பிட்டு முடிக்கிறார்கள். அவர்களுக்குள் பிறர் கட்டாயப்படுத்துகிறதென்ற ஏற்பாடில்லாததினால் பூகஞ்சி என்ற அம்சம் காண இடமில்லை. நமக்குள்ளும் அந்தமாதிரி ஏற்பாடு இருந்தால் நல்லது. அவனவன் வயிற்றுக்குச் சாப்பிடுகிறதற்கு இன்னொருவர் சிபார்சென்ன? அம்மா, இத்தனை சாதமும் சாப்பிடமுடியாதம்மா; கொஞ்சம் பிழிந்து வைத்து விடுகிறேன். கோபிக்காதே அம்மா' என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டான்.

அப்பொழுது அம்மாள் தன் பிள்ளை சொன்ன காரணங்களை எல்லாம்கேட்டு மனந்தெளிந்து அவன் சௌகரியம்போல் செய்ய அனுமதித்ததுடன் "எனக்குக்கூட வயிறுநிரம்பச் சாப்பிட்டால் வரவரக் கஷ்டமாகத்தானிருக்கிறது. வய்தாகிவிட்டது பார்த்தாயா. சாப்பிட்டுவிட்டு ராமா, ராமா, என்று உட்கார்ந்தால் தூக்கம் வந்துவிடுகிறது. ஏதாவது வம்புபேசினால் தான் சரியாக இருக்கிறது. இனிமேல் நீ வேணுமென்கிறபோது என்னைக் கேளு, நான்உனக்கு வேண்டிய அளவு சாதம் போடுகிறேன். நாகப்பட்டணத்துக்குப் போனோமானால் ஏதாவது அகத்திலே நல்லபக்ஷணம் பண்ணிவைத்துக் கொடுக்கிறேன். எப்படியாவது நீமுன்னுக்குவந்தால் எனக்குப் போதும். நீசொல்லுகிறதும் நியாயமாகத்தானே இருக்கிறது' என்றாள்.

அவரவர்களுக்கு வேண்டிய உணவின் மாதிரியும் அளவும் சாதாரணமாக அவரவர்களே நிர்ணயிக்கவேண்டும். குழந்தைப் பருவத்தில் ஊட்டிவளர்க்கும் தாய் இந்த உண்மையை உணர்ந்து தன் குழந்தையை மிதமாக உணவு கொடுத்து வளர்க்கவேண்டும். போசனங்களுக்கு மத்தியில் நச்சுத்தீனி தின்னலாகாது.

## THE SECRET OF LONGEVITY.
## STORY OF KING DHARMAPALA.
## தர்மபால ராஜன்கதை.
### சிரஞ்சீவி யிரகசியம்.

பூர்வகாலத்தில் காசியில் ஒருவகையான பிராமணர்கள் இருந்தனர். இவர்கள் ராஜவம்சத்தைச் சேர்ந்தவர்கள். இவர்களுடைய குடும்பப் பெயர் தர்மபாலு. இப்பெயர்கொண்ட ஒருவன் அரசு செலுத்திவந்தான். அவனுக்கு ஒரு புத்திரன் பிறந்தான். அந்தப் புத்திரனுக்கும் தன்னைப்போலவே தர்மபாலு என்று பேரிட்டான்.

இந்த தர்மபாலு என்னும் ராஜகுமாரனுக்கு வித்தியாப்பியாசம் செய்விக்கும் பருவம் வந்துவிட்டது. ஆகலால் அக்காலத்தில் கல்வியிற் சிறந்து பெரும்புகழடைந்திருந்த தேசலை (Tesala) என்னும் பட்டணத்திலுள்ள ஒரு பண்டிதரிடம் அவன் தகப்பன் அவனை அனுப்பினன்.

இப்படியாக இந்த ராஜகுமாரன் வித்தியாப்பியாசம் செய்துகொண்டு வருங்காலத்தில் பண்டிதருடைய ஜேஷ்டபுத்திரன் காலகதியால் மரணமடைந்தான். குருவானவர் அந்தப் பிணத்தை தகனம் பண்ணும் பொருட்டு நதிக்குச் சென்றார். அப்போது எல்லாச் சிஷர்களும் குருவோடு சென்றார்கள். தர்மபாலு மாத்திரம் வீட்டிலேயே இருந்துவிட்டான்.

நதிக்கரையில் நடத்தவேண்டிய கிரியைகளையெல்லாம் நடத்திவிட்டு குருவும் சிஷர்களும் வீடுவந்து சேர்ந்தார்கள். பிறகு சிஷர்களெல்லாம் அவரைச் சுற்றிக்கொண்டு மிகவும் நல்லவனும் விவேகியாயும் இருந்த அவருடைய பிள்ளையின் மரணத்தைப்பற்றி அவருடன் துக்கித்துக் கொண்டிருந்தார்கள்.

பின்பு அடியில்வருமாறு தர்மபாலுவுக்கும் அவனுடைய சகோதர சிஷர்களுக்கும் சம்பாஷணை உண்டாயிற்று.

தர்ம.—"நீங்கள் நமது குருவின்மகன் சிறுவயதிலேயே இறந்துபோய்விட்டான் என்று விசனப் படுகிறீர்கள். ஆனல் மனிதர் சிறுவயதில் இறந்துபோகக் கூடாதுதான்."

மற்றசிஷ.—"எல்லா ஜீவ ஜெந்துக்களுக்கும் மரணம் உண்டென்பது உனக்குத் தெரியாதா?"

தர்ம.—"ஆமாம் நீங்கள் சொல்வது சரியே! ஆனாலும் மனிதர் விருத்தாப்பியமான பிறகுதான் இறக்கவேண்டுமேதவிர சிறுவயதில் இறந்துபோகக்கூடாது."

மற்றசிஷ.—"ஆனல் உங்கள் வம்சத்தில் சிறுவர் இறப்ப தில்லையா?"

தர்ம.—"இல்லை, எங்கள் வமிசத்தில் ஒருவர் தவறாமல் எல்லாரும் இரட்டைக் கிழவராகி (மிகவும் வயது முதிர்ந்து) இறக்கிறார்களே தவிர ஒருவரும் சிறுபிராயத்தில் இறப்பதில்லை."

இவன் இப்படிச் சொல்லவே மற்ற சிஷர்கள் இதைக்கேட்டு மிக்க ஆச்சரியப்பட்டு குருவினிடம் இந்த சங்கதியைச் சொன்னார்கள்.

இதன்மேல் குருவானவர் தர்மபாலுவை யழைத்து "உங்கள்வம்சத்தில் ஒருவராவது சிறுவயதில் இறப்பதில்லையா" என்று கேட்டார்.

தர்மபாலு "ஆமாம் எங்கள் குலத்தில் ஒருவரும் சிறுவயதில் இறப்பதில்லை" என்றான்.

இதைக்கேட்டு குரு மிகவும் ஆச்சரியப்பட்டு தனக்குள்ளே சொல்லிக் கொண்டதாவது:—

"இது என்ன அதிசயம்! நான் தர்மபாலுவின் தகப்பனிடம் சென்று அவரிடம் இதைச் சொல்லி இதன் உண்மையை அறியவேண்டும். அவர் இந்த சங்கதி நிஜந்தான் என்று சொன்னால் நான் அவர்களிடம் குடிகொண்டிருக்கிற குணகுணங்களைக் கேட்டறிந்து அந்தப்படி என்னைச் சீர்திருத்திக் கொள்ளக் கடவேன்."

அந்தப் பிரகாரமே ஐந்து நாளைக்குப் பிறகு அவர் ஒரு கூலியாளின் தலையின்மேல் ஒரு வெள்ளாட்டின் எலும்புகளை மூட்டையாகக் கட்டுவித்து, அவனையும் கூட்டிக்கொண்டுக் காசிப்பட்டணம் வந்துசேர்ந்தார்.

இவர் தர்மபாலுவின் வீட்டுக்கு வந்ததும்தர்மபாலுராஜன் இவரை மிக ஆசார உபசாரத்தோடு அழைத்து, அவருடைய பசியை யாற்றி ஒரு ஆசனத்தின்மேல் வீற்றிருக்கச்செய்தான். குருவானவர் தன் காலைக்கழுவிக்கொண்டு உட்கார்ந்துக்கொண்டு "ஓ பிராம்மணோத்தமா! உனக்கு மிகவும் சங்கடமான சங்கதி ஒன்று கொண்டுவந்திருக்கிறேன். மூன்றுவேதங்களை ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தவனும், மிக புத்திசாலியாயுமிருந்த உன்னுடைய குமாரனுகிய தர்மபாலு இறந்துபோனான். ஆனால் உனக்கு எல்லாப் பொருள்களும் அநித்தியம் என்றது தெரியும். ஆகையால் வீணாக விசனப்படாதே" என்று சொன்னார்.

அரசன் இவரைப்பார்த்து சிரித்து "என் மகன் இறந்துபோகவில்லை. வேறு யாராவது இறந்துபோயிருக்கவேண்டும்" என்றான். உபாத்தியாயர் அரசனுடைய நிர்ணயத்தைக் கண்டு ஆச்சரியமடைந்து "உன் சொந்தமகனே இறந்து போயிருக்கிறான். இதோபார்! அவனுடைய எலும்புகள்" என்று சொல்லிக்கொண்டு மூட்டையிலிருந்த எலும்பைக் காட்டினார்.

மறுபடியும் அரசன் "இந்த எலும்புகள் ஒரு ஆட்டினுடையதோ அல்லது ஒரு நாயினுடையதோ அல்லாமல் தர்மபாலுவின் எலும்புகள் அல்ல. என்மகன் இறந்துபோகவில்லை. எங்கள் வம்சத்தில் 7 தலைமுறைகளாக ஒருவரும் சிறுவயதில் இறந்துபோனதில்லை" என்றார்.

"ஓய் பிராமணோத்தமா? நீர் என்ன நீதிகளை அனுசரிக்கிறீர்? என்ன விரதங்களை அனுட்டிக்கிறீர்? உன் வம்சத்தில் சிறுவர்களை சாவினின்றும் காப்பாற்றும் இரகசியமான சங்கதி எது?" என்று குரு சிரேஷ்டர் கேட்டார்.

தர்மபாலு என்பவர் அடியில் வருமாறு சொன்னார்.

"1. நாங்கள் மாசற்ற தர்ம வழியில் நடக்கிறோம்.

"2. பொய்யென்பது எங்களிடம்நாடாது.

"3. பாவச்செயல் எங்களைக் கண்டால் விலகும்.

"4. எது பாவமான காரியமோ அதைத் தவிர்த்து புண்ணியமான காரியங்களைத் தழுவுவோம்.

"5. நல்லவர்கள் சொல்லுகிற பிரசங்கங்களைத் தான் கேட்போம்.

"6. துஷ்டர்கள் எங்கள் காதினிடம் வந்து உரத்துக் கூவினாலும் செவி கொடோம்.

"7. நாங்கள் துஷ்டர்களைத் தள்ளி சிஷ்டர்களை சிநேகிதராக்கிக் கொள்ளுகிறோம்.

"8. அதிதிகளுக்குப் பிக்ஷை மிகவும் சந்தோஷத்தோடு கொடுக்கிறோம்.

"9. அப்படிப்பட்டதர்மத்தின் பலனாககடவுள் சௌக்கியத்தை எங்களுக்குந் தந்தருளுகிறார்.

"10. அதிதிகளுக்குப் பிக்ஷைபோட்டால் அவர்கள் தங்கள் மனங்குளிர்ந்து எங்களை ஆசிர்வதித்துச் செல்லுகிறார்கள்.

"11. நாங்கள் பிராமணகுலசிரேஷ்டர்களையும், திக்கற்றவர்களையும், களைத்துப்போன வழிப்போக்கர்களையும், சட்டிப்பிச்சைக்காரர்களையும், கந்தை உடுத்துக் கொண்டுவருகிற பிச்சைக்காரர்களையும் எங்கள் பந்துக்கள்போலப் பூஜிக்கிறோம்.

"12. எங்களிடம் களங்கமற்ற பதிவிரதா தர்மம் குடியிருக்கிறது.

எங்களது சுந்தரமான மனைவிகளைத் தவிர வேறொருவர்மீதும் விருப்பம் கிடையாது.

அவர்களோ என்றால் தங்களுடைய மிகவும் அருமையான பர்த்தாக்களைத் தவிர வேறொருவரையும் பார்த்திருக்க மாட்டார்கள்.

இப்பேர்ப்பட்ட பதிவிரதா தர்மங்களின் பலனாக எங்களுக்கு புத்திக் கூர்மையும், சாஸ்திர விஷயங்களில் மிகவும் பயின்றகுண சீலமும் வாய்ந்த குழந்தைகள் உற்பத்தியும் ஆகிறார்கள்.

"13. எங்கள் பந்துஜனங்களும் மித்திரர்களுமாகிய, பிள்ளை, பெண், சகோதரன், சகோதரி, மனைவி முதலிய எல்லோரும் மற்றும் எங்களிடம் சேவகம் செய்கிறவர்களும் எங்களுடைய அடிமைகளும் இதேமாதிரி புண்ணிய திசையை நாடுகிறவர்களா யிருக்கிறார்கள்.

"14. உண்மையான புண்ணியவழி எங்கள் மனதில் குடிகொண்டிருக்கிறது. எங்களுடைய மனதாகிய ஆகாயத்தை அசுத்தப்படுத்த ஒரு நோவுக்காவது ஒரு விசனத்துக்காவது தைரியம் இல்லை.

"15. எங்களுடைய நெற்றி எல்லையில்லாச் சந்தோஷத்தில் நிறைந்திருக்கிறது.

"இவைகளின் பலன்தான் எங்களுடைய குழந்தைகளைச் சிறுவயதில் இறப்பதினின்றும் காப்பாற்றுகிறது."

பின்னும் அரசன், "பனையிலையால் செய்தகுடை எப்படி ஒருவனை வெயிலினின்றும் மழையினின்றும் காக்குமோ அப்படியே பரிசுத்தமான மனமுள்ளவர்களுக்கு நேரும் துன்பங்களை அவர்கள் செய்யும் புண்ணியங்கள் நீக்குகின்றன. என் மகனான தர்மபாலு அவன்பண்ணிய புண்ணியத்தாலும் ஆயுர் பலத்தினாலும் உயிரோடிருக்கிறான். இந்த எலும்புகள்வேறு யாருடையதோ எனக்குத் தெரியாது" என்றார்.

குருவானவர் பிராமண குலத்தரசனான தர்மபாலுவின் முகத்தில் தோன்றிய தர்மகுணத்தையும் தாராளகுணத்தின் மகிமையையும் பார்த்து வெட்கித்துப் போய்விட்டார்.

ஆகையால் இதைப்படிக்கிற எல்லோரும் மேற்சொன்னவாறு நடந்து நீடித்தவாழ்வைப் பெற்று சுகமாக வாழ்வார்களாக.

## EVENTS OF THE MONTH.

## மாதவிசேஷங்கள்.

உத்தராயண புண்யகாலம்.

கண் திறக்கக் கல்வி அவசியம்.

மார்கழி௴ திருவாதிரை வந்துபோயிற்று. பகவானும் சகள வுருக்கொண்டு பக்த ஜனங்களுக்கு உண்மை யுபதேசம் செய்வான் குருமூர்த்தமாய் அவதரித்து ஆனந்த நடேசராக தரிசனந் தந்தருளினர். எதுவும் கண்ணுள்ளவர்தான் காண்பார்கள். கண்ணிலானுக்குக் காட்சியில்லை. "முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள், அகத்திற் கண்கொண்டு பார்ப்பதே ஆனந்தம்," என்றோதியுள்ளார் பெரியோரும். ஆதலால் அகக்கண் திறக்கப்பெறுவதே மனுஷஜன்மம் எடுத்ததற்குப் பலனும். அகக்கண்பெற்றுப் பார்க்கவும்கற்றுப் பழகினால் அப்பொழுது அகக்கண்ணுக்கு விளங்குவது முகக்கண்ணுக்கும் விளங்குவது விகசிதமாகும். "அரங்கத்து அம்மான் திருக்கமல பாதம் வந்தென்கண்ணின் உள்ளன ஒக்கின்றதே" யென்று ஆழ்வார்கூறிய திருவாக்குப் பெருமை அப்பொழுதுதான் விளங்கும்.

"பார்வை யிரண்டுண்டு: பஹிர்-அஹமுக மேன்பர்."

என்றார் மற்றோரும். இந்த இரண்டு பார்வையும் ஒன்றுவதுணர அகத்திற்கண்டதைப் புறத்திலும் புறத்திற் கண்டதை அகத்திலும் கண்டு இரண்டும் 'ஒன்றுவது'—அதாவது, ஒருபொருளையே உணர்த்துவது கண்டு உணரல்வேண்டும். இதற்குத்தான் தரிசன சக்தி யென்று சொல்கிறது. தரிசனசக்தி யென்றும் (Powers of Observation) என்றும் முடிவில் ஒன்றேயாகும். பார்க்கப் பார்க்கத்தான் பார்வை தீக்ஷண்யப்படும்.

அப்படியே கேட்கக்கேட்கத்தான் கேள்வி தீக்ஷண்யப்படும். இந்திரியங்கள் என்று நாம் சொல்வதெல்லாம் மனோசக்திகளின் பிரவிர்

த்திவாயில் அன்றி வேறல்ல. இந்திரியங்கள் கருவியாகும். மனேசக்தி கரணம் ஆகும். கருவி கரணங்களின்றி ஆராய்ச்சியில்லை.

"ஆராய்ச்சியின்றி தேர்ச்சியில்லை."

ஆதலால் "ஆய்ந்து-ஓய்ந்து-தேர்தல்" என்பது அறிவு விலாசத்தின் லக்ஷணமுறையாகும். பசு மாடு புல்லைமேய்ந்து பின்னர் அவகாசமாய்ப் படுத்துக்கொண்டு அசைபோட்டு, முன் தின்னபுல்லை ஜீரணமாகத் தயார்செய்து முடிவில் பாலைக் கொடுக்கிறதுபோல் குழந்தைகளுக்கு போதனுமுறையறிந்து போதை(அறிவுமயக்கம்) உண்டாகப் போதிக்கவேண்டும். போதை தெளிந்தால் அது அறிவு ஆகும். போதையிலுள்ள மயக்கம் மனக்கிளர்ச்சியினல் உண்டாவது. ஆகவே போதனு முறையறிந்து போதித்தால் தெரிந்துகொள்ள வேண்டுமென்கிற மனக் கிளர்ச்சி யுண்டாகும். இந்த மனக்கிளர்ச்சியின்றி அறிவுவிர்த்தி யுண்டாகாது. அறிவு விர்த்தியின்றி மனப்பழக்கம் சித்திக்காது. மனம் படியப்பெறுவதே மனப்பழக்கம். இந்த மனப்பழக்கம்தான் கல்வியென்னும் பதத்துக்கு உண்மையான பொருள்.

பழக்கமே பயிர்ச்சி.

"சித்திரமும் கைட்பழக்கம், செந்தமிழும் நாப்பழக்கம், கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்" என்றூர் ஔவையார். இந்த உண்மையைத் தான் எத்தேசத்திலும் எக்காலத்திலும் எத்தகையாரும் உண்மையான பாலபோத முறையாக வெடுத்துக் கையாளக்கூடும்.

"கைப்பழக்கம்" என்று ஔவையார் சொன்னதையே "Hand and Eye Training" என்று சொல்கிறுர்கள். (Vide Mr. Porret's Lecture at the Teacher's College Exhibition.)

"நாப்பழக்கம்" என்று சொன்னதில் இலக்கிய இலக்கணங்களோடு உள்ளத்தோர்ந் து ண ந் சதை வெளியிடும் சக்தியனைத்தும் அடங்கும். இது தான் வாணியின் வரப்பிரஸாதம்.

"மனப்பழக்கம்"-கலைக்ஞான மெல்லாமடங்கும். சாஸ்திரஞானம் (Scientific Knowledge) என்பது "மனப்பழக்கம்" இன்றி சித்தியாதொழியும்.

இந்தமூன்றில் கர்மம் (செய்கை), கருவி, கரணம் என்னும் மூன்றின் பயிற்சியும் அடங்கும். இதையே பொதுவில் கல்விப்பயிர்ச்சி யென்றும், மனப்பயிர்ச்சியென்றும், அடைமொழியின்றி "பயிர்ச்சி" (Calture) யென்றும் சொல்கிறது.

பிரசனம்.

இந்தப் பயிர்ச்சிக்கும் உத்தராயண புண்ய காலம் என்கிற தலைப்பெயருக்கும் என்ன சம்பந்தம்? என்று இதை வாசிப்போர் கேட்கலாம். உத்தரம் கூறுவோம்.

உத்தரம்.

கைப்பழக்கம், நாப்பழக்கம், மனப்பழக்கம் இவற்றிற்கும் கண்ணுக்கும் என்ன சம்பந்தமுண்டோ அதே சம்பந்தம் உண்டு மற்றிரண்டுக்கும். கண்ணுக்கு ஞானேந்திரியம் என்கிற விசேஷப்பேருண்டு. காண்பானுக்கும் காட்சிக்கும் காண்படு பொருளுக்கும் பொதுவாய் சம்பந்தப்பட்டுள்ளது கண். மனிதனுக்கு கண் எப்படியோ அப்படிப்போன்றது சூரியன் ஜகத்துக்கு.

சூரிய நமஸ்காரம்.

"நமஸ்ஸவித்ரே ஜகதேகச் சக்ஷுஷே" என்றுள்ள சூரியநமஸ்கார ஸ்தோத்ரத்தில் ஸவித: என்பது சூரியனுக்குப் பேர். ஜகத்

துக்கு ஒரு கண்ணாகவிருந்து விளங்குபவனே உனக்கு நமஸ்காரம். ஜகத் என்பதில் தோற்றப்படுவதெல்லாம் அடங்கும். "ஜகதேகச் சக்ஷுஸான" இந்தக்கண் அகமுகப் பார்வையுள்ளதா பஹிர்முகப் பார்வையுள்ளதாவென்று தெரிந்துகொள்வது பிரதானம். ஏனெனில் அகமுகப்பார்வை (நிவிர்த்தி) ஒடுக்கத்தையும், பஹிர் முகப்பார்வை விர்த்தியையும் உண்டுபண்ணும். வடக்கும்தெற்கும் விர்த்தி நிவிர்த்தியைக்குறிக்கும் திசைகளாம். இவ்விரு திசைகளுக்கும் அதிஷ்டான தேவதைகள் குபேரனும், யமனும் அவர் சூரியன் நிவிர்த்தி மார்க்கத்தில் தெற்கு நோக்கிச்சென்று உலகெலாம் குளிரால் நடுங்கியொடுங்கும் காலத்தில் சட்டென்றுநின்று விர்த்தி மார்க்கமாகிய வடதிசையை நோக்குவதுதானே உத்தராயண புண்யகாலம்.

SUMMER SOLSTICE.

உத்தராயணம்.

இது டிஸெம்பர்மீ 22உயில் என்பர் மேற்றிசையார். சந்திரமான காலகணிதப்படி இது கிட்டத்தட்ட சரியாம். உள்ளபடி இந்த வருஷம் டிஸெம்பர்மீ 24உயில் நேர்ந்த அமாவாஸையோடு தக்ஷிணாயனம் முடிவாகி உத்தராயணம் ஆரம்பமாகிறதென்பர். ஆனால் ஸௌரமான காலகணிதப்படி மகரசங்கராந்தி ஜனவரிமீ 13உ. இந்த வித்தியாசமெல்லாம் காலகணிதமுறை வித்தியாஸத்தை யொட்டிவந்தவை. டிஸம்பர்மீ 25உ கிறிஸ்து பிறந்தநாள் என்பது ஒரு ஐதிகம். அடுத்த பௌர்ணமியன்று திருவாதிரைநாளில் சிவன் பிறந்தார் என்பது ஒரு ஐதிகம். காலகணித பேதத்தைத் தள்ளிப்பார்த்தால், இவ்விரண்டு ஐதிகங்களும் ஒரு தத்துவத்தையே குறிக்கிறதென்று விளங்கும்.

"ஜகத்சிருஷ்டி" காலம்.

மேலே நாம் எடுத்தாண்ட சூரிய நமஸ்கார ஸ்தோத்திரத்தில், சூரியனை "ஜகத் ப்ரஸூதி, ஸ்திதி, நாச ஹேதவே" யென்று வர்ணித்திருக்கிறது. அதாவது, ஜகத்தை உண்டுபண்ணிக், காப்பாற்றி, அழிக்கும் காரணஸ்தரே யென்று அவரை வர்ணித்திருக்கிறது. ஆகையால் உத்தராயண புண்யகாலம் "ஜகத் சிருஷ்டி" காலம் (Spring season).

ஐதிகமும் அதன் உண்மையும்.

இந்தக் காலத்தில்தான் கிறிஸ்துபிறந்த பண்டிகையும் புதுவருஷப் பண்டிகையும் கொண்டாடப்படுகிறது. திருவாதிரையும் மகர சங்கராந்தியும் கொண்டாடப்படும் காலமும் இதுவே. சிருஷ்டிகாலத்தில் சைதன்ய சக்தி சகள உருக்கொண்டு மானிடர்க்குப் போதனை செய்கிறது. (Nature Study) பிரகிருதி வித்தைக்கு ஏற்றகாலம் இதுவே. இந்தக் காலத்தில் தேவர்களெல்லாம் விழித்தெழுங்காலம்; ஸஜ்ஜனர்க்கு அனுகூலமான காலம் இதுவே.

சந்தோஷமுகமன்.

ஆகவே இக்காலத்தில் ஒருவருக்கொருவர் சந்தோஷமுகமன் கொண்டாடுவது சகஜம். இப்பத்திரிகையின் ஆசிரியரும் பாலபோதனை சங்கக் காரியதரிசியாகவிருக்கும் முறையில் பள்ளியிற்படிக்கும் பாலர்களையெல்லாம் சிக்ஷித்த விக்யா இலாகா தலைமைஸ்தானத்தை வகித்துள்ளவரும் இப்பத்திரிகாசிரியரை ஈசுவரவாகக்கால் "பாலர்க் குழைக்கவென்று பரிந்து மிக அழைக்குச், சாலவு நானித்துறையிலுனக்குதவி செய்வேனென்ற" வருமான கனம். மிஸ்டர் ஜெ. எச். ஸ்டோனுக்குச் சந்தோஷமுகமன்கூற, அவரும் அதை அங்கீகரித்து பதில் முகமன் கூறியுள்ளார்.

GREETING TO CHILDREN.

ஆசீர்வசனம்.

அவருடைய சந்தோஷமுகமன் பள்ளியிற்படிக்கும் பாலர்க்கெல்லா முரியதாகையால் அதை இங்கே வெளியிட்டு அவர்களெல்லாருக்கும் புதுவருஷம் ஸகலபோக பாக்கியங்களையுமளித்து வித்யா ஸம்பத்தை யுண்டு

பண்ணுவதாகவென்று அசிகூறி பகவானைத் துதித்துப் பிரார்த்திக்கிறோம். இனி மற்ற விசேஷங்களைச் சுருக்கிச்சொல்லி இதை முடிப்போம்.

காங்ரேஸும் கான்பரேன்ஸுகளும்.

முதலாவது எல்லாரும் கவனிக்கத்தக்கது கிறிஸ்த்மஸ் விடுமுறைகாலத்தில் கூடும் காங்ரெஸ்சபையும் இதர கான்பரென்ஸுகளுமே. இந்தியன் நேஷனல் காங்ரெஸ் சபையின் 31-வது வருஷாந்தக்கூட்டம் இலக்ஷ்மணபுரி யென்று பேர்போன லக்னோவில் நடந்தேறியது. மிஸ்டர் மொஸும்தார் அதற்கு அக்கிராசனாதிபதியாக விருந்தார். வடமேற்கு மாகாணத்து உதவிக்கவர்னர் ஸர். ஜேம்ஸ் மெஸ்டன் இரண்டாவதுநாள் காங்ரெஸ் சபைக்கு விஜயமாய் வந்திருந்தார். இந்த வருஷத்தின் முக்கியவிசேஷம் காங்ரெஸார் ஒரு மனப்பட்டு கக்ஷிப்பிரதிகக்ஷியின்றி இந்தியாவுக்கு "ஸ்வய ஆக்ஷி" வேண்டுமென்று தீர்மானம் செய்தார்கள். இந்த யுத்தத்துக்குப் பிறகு துரைத்தன ஏற்பாடுகள்மாறுவது நிச்சயமாதலால் இந்தியாவானது த்ரௌபதி பஞ்சபாண்டவருக்கு வாழ்க்கைப் பட்டதுபோல்; பிரிடிஷாரால் பஞ்சதேசத்தார் (Five Nations) நாட்டாண்மைக்குள்பட்டதாக ஆய்விடப் போகிறதென்றுணர்ந்து இக்தீர்மானம் அது கூடாதென்பதைத் தெரிவிக்க முன்னிட்டுச் செய்யப்பட்டதாகத் தெரிகிறது.

மகம்மதியர் கூட்டம்.

மகம்மதியர்களும் இந்தியாமுழுவதும் பரவிய முஸ்லிம்லீக் சபையின் வருஷாந்தக்கூட்டம் கூடினார்கள். அவர்களும் காங்ரெஸாரோடு கலந்து மனம்ஒன்றுபட்டு "ஸ்வய ஆக்ஷி" தீர்மானத்துக்கு பாத்தியப் பட்டவர்களாயிருந்திருக்கிறார்கள்.

மற்ற கான்பரேன்ஸுகள்.

மற்ற கான்பரென்ஸுகளின் பேரைமட்டும் சொல்வதுபோதும். லக்னோவில் கூடியவை: ஸோஷியல் கான்பரென்ஸ்; தொழில்விர்த்தி கான்பரென்ஸ் ; தியஸாபிகல் கான்பரென்ஸ். சென்னையில் கிறிஸ்தவர் கான்பரென்ஸ் ஒன்று கூடியது. இந்தியாவிலுள்ள கணிதசாஸ்திரப் பிரியர்கள்கூடிய சபையொன்று இருக்கிறது. அச்சபையாரும் இந்தவருஷம் சென்னையில் ஒரு கான்பரென்ஸ் கூடினார்கள்.

கிறிஸ்த்மஸ் விளையாட்டும் கொண்டாட்டமும்.

"பீப்ள்ஸ் பார்க்" தோட்டத்தில் கிஸ்தமஸ் ஜனவரிப் பண்டிகையைக் கொண்டாட, விளையாட்டும் வேடிக்கைகளும்வைத்துக் காசு வாங்கிக்கொண்டு ஜனங்களை உள்ளேவிட்டார்கள். இதில் சேர்ந்ததொகை யுத்தபண்டுக்கென்று ஏற்பாடாயிற்று.

சைதாப்பேட்டையில் வித்யா சம்பந்தமான காட்சி.

சைதாப்பேட்டை டீச்சர்ஸ் காலேஜில் வித்யா சம்பந்தமான பொருட்காட்சியொன்று வைக்கப்பட்டது. அதில் வித்யா போதனா முறைகளும் அவற்றிற்குவேண்டிய தளவாடங்களும் காட்சிப் பொருள்களாகக் காட்டப்பட்டிருந்ததோடு, பள்ளிக்கூட சாமான்கள், பள்ளிக்குழந்தைகள் கைவேலைகள் முதலியனவும் காட்சிப் பொருள்களாகக் காட்டப்பட்டிருந்தன. போதனாசிரியர்களேயன்றி பெற்றோர்களும் அக்காட்சியைக் கண்டுகளிக்கவும் அதிலிருந்து அனேக உண்மைகளைக் கிரகிக்கவும் சாதகமானதாயிருந்தது.

## எக்ஸிகியூடிவ் கௌன்ஸில் மெம்பர்.

அடுத்த பிப்ரவரீ 24௳யோடு கனம் ஸர். பி. எஸ். சிவஸ்வாமி அய்யர் அவர்களுடைய ஐந்து வருஷதவணை முடிகிறது. அவருக்குப் பின் அவருடைய ஸ்தானத்தில், கனம். திவான் பஹதூர் பெருங்காவூர் - ராஜகோபாலாசாரியார் அவர்களை நியமிக்க சிபார்சு செய்திருந்ததை மாக்ஷிமைதங்கிய அரசர் அங்கீகரித்துவிட்டாரென்பதைத் தெரிவிக்கச் சந்தோஷப்படுகிறோம்.

---